# மின்தமிழ் மேடை




## "தமிழக கல்வெட்டுக்கள்"

**தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)**

**வெளியிடும் காலாண்டு மின்னிதழ்**

**மின்தமிழ்மேடை - காட்சி: 3**

**அக்டோபர் - 2015**



# மின்தமிழ்மேடை

**காட்சி:** 3

---

அக்டோபர் - 2015

## "தமிழக கல்வெட்டுக்கள்"




முன்அட்டைப் படம்: செப்டெம்பர் 6, 2015 அன்று ஓசூரில் நடைபெற்ற, "அறம் இலக்கிய அமைப்பு ஓசூர் மற்றும் கங்கைகொண்ட சோழபுரம் மேம்பாட்டுக் குழுமம்" இணைந்து நடத்திய "மாமன்னர் இராசேந்திர சோழன் அரியணை ஏறிய 1001 ஆவது ஆண்டுவிழாவில்," தொல்லியல் துறையில் ஆர்வமுடன் செயலாற்றும் இளையதலைமுறை ஆர்வலர்களுக்கான "தொல்லியல் முனைவோர்" விருதினை தொல்லியல் ஆய்வாளர் "முனைவர் பத்மாவதி" அவர்களிடம் இருந்து பெறுபவர் தொல்லியல் முனைவோர் "திரு. தென்கொங்கு சதாசிவம்" அவர்கள்.




THF

தமிழ் மரபு அறக்கட்டளை

**தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு**

http://www.tamilheritage.org/

இதழ் தொகுப்பு:

**தேமொழி**

# தலையங்கம்: “தமிழக கல்வெட்டுக்கள்”



கல்லில் எழுதுதல்... அது எல்லோருக்கும் உடன் சாத்தியப்படும் ஒரு எளிமையான விடயமா? நிச்சயமாக இல்லை!

கல்லில் எழுத்துக்களைச் செதுக்கி ஒரு கல்வெட்டினை உருவாக்குவது ஒரு தனிச்சிறப்பு வாய்ந்ததொரு கலை!

உலகில் கல்லில் சொற்களைச் செதுக்கி அரச ஆவணங்களையும் வரலாற்றுச் செய்திகளையும் பதிப்பித்த இனங்கள் என்றால் அது எகிப்திய பண்டைய நாகரிகத்தினை அமைத்த அச்சமூகத்தையும், இந்தியாவில் இருக்கும் சமூகத்தையும் சுட்டுவதாகத்தான் இருக்க முடியும். எகிப்திய ஹீரோக்லிப்ஸ் எழுத்துக்கள் உருவங்களைக் கொண்டு சொல் அமைப்பை வடிவமைக்கும் தன்மையை அடிப்படையாகக் கொண்டது. இந்தியாவில், அதிலும் குறிப்பாக தென்னிந்தியாவில் கிடைக்கின்ற கல்வெட்டுக்களோ வரிவடிவ எழுத்துக்களின் தொகுதிகள் சொற்களாக அமைந்து, அவை வாக்கியமாக விரிந்து, ஒரு குறிப்பிட்ட செய்தியை மிக விரிவாக வழங்குகின்ற தன்மையைக் கொண்டவையாக இருக்கின்றன.

கல்வெட்டுக்களாகச் செய்திகள் பதிக்கப்படுவதை நான்கு வகையாகப் பிரிக்கலாம்:

- ஆரம்பக்கால கல்வெட்டுக்களாக அமைந்த ஓரிரு வரிகள் கொண்ட வாக்கியத்தினால் அமைந்தவை
- ஒரு நடுகல்லில் குறிப்புக்களாகச் சில தகவல்கள் வழங்கப்படும் வகை
- ஒரு ஆலயத்தின் தனிப்பகுதிகளில் சில வரிகளில் கல்வெட்டுச் செய்திகள் செதுக்கப்பட்டிருக்கும் வகையில் அமைந்தவை
- ஒரு ஆலயத்தின் சுவரின் பெரும் பகுதியிலோ அல்லது முழுப் பகுதியிலோ நூலில் உள்ள பக்கங்களைப் போல கொத்து கொத்தாகச் சொற்குவியல்கள் குவிந்த வகையில் நீண்ட வாக்கியங்களில் செதுக்கப்பட்ட வரலாற்றுச் செய்திகளாக அமைந்தவை

இன்றைய தமிழக நிலப்பரப்பில் கிடைக்கக்கூடிய சான்றுகளின் அடிப்படையில் தொன்மையான தமிழ் எழுத்து கி.மு.5ம் நூற்றாண்டிலிருந்து வழக்கில் இருந்தது என்பதைப் பானை ஓடுகளிலும், முதுமக்கள் தாழிகளிலும், மலைப்பாறைக்கு கைகளிலும் தொல்லியல் ஆய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட வேறு சில

சின்னங்களிலும் காண்கின்றோம். இந்தத் தொன்மையான தமிழ் எழுத்தைத் "**தமிழி**" எனச் சுட்டுவதையும் வழக்கில் காண்கின்றோம். இதன் தொடர்ச்சியாக கிபி 3ம் நூற்றாண்டு வாக்கில் "**வட்டெழுத்து**" என்ற எழுத்து வகையில் "**தமிழ் எழுத்து**" என்ற வகையும் தனித்தனியாக வளர்ச்சியுறத் தொடங்கின. இந்த எழுத்துக்களின் வடிவங்கள் படிப்படியாக மாற்றங்களை உட்புகுத்தி வளர்ச்சியுற்று தனி எழுத்து வகைகளாகப் பரிமாணம் பெற்றன.

கல்வெட்டுக்கள் தமிழ் மொழி வரலாற்றை அறிய உதவும் ஒரு முக்கிய சாதனம் என்ற கருத்தை முன்வைத்தவர் ஆங்கிலேயரான ஜேம்ஸ் பிரின்சப் என்பவர். (கல்லெழுத்துக்கலை, நடன.காசிநாதன்) 1837ம் ஆண்டில் இவர், "வெளிநாட்டார் இந்தியாவில் உள்ள கல்வெட்டுக்களையெல்லாம் திரட்டிப் பிடித்து அறிந்தோமென்றால் இந்தியாவின் பழமையான வரலாற்றை மிகத் தெளிவாக அறியலாம்" என்ற கருத்தை வெளியிட்டார். இது இன்றளவும் உண்மைதான் என்பதை வரலாற்று ஆர்வலர்கள் அறிந்திருக்கின்றனர். தமிழகத்தின் கல்வெட்டுக்கள் தென்னிந்திய நிலப்பரப்பினையும் தாண்டி கிழக்காசிய நாடுகளிலும் தூரக்கிழக்கு ஆசியாவிலும் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருப்பதையும் கேள்விப்படுகின்றோம்.

ஆக, தொடர்ச்சியான கல்வெட்டு ஆய்வுகள் என்பவை தமிழக பண்டைய வரலாற்றை அறிந்து கொள்ள மிக முக்கிய ஆதாரங்களாக அமைகின்றன. இத்தகைய வரலாற்று ஆதாரங்களை அதன் சிறப்பும் முக்கியத்துவமும் அறியாது கோயில் சீரமைப்புப் பணி, கோயில் புதுப்பித்தல், மண்டபம் சீரமைப்பு என்ற பெயரில் அழிக்கப்படுவது மிகுந்த கண்டனத்துக்குரியதொரு செயலாகும்.

விரிவான வகையில் கல்வெட்டுக்களின் முக்கியத்துவம் பற்றிய செய்திகள் இளம் தலைமுறையினருக்குக் கொண்டு செல்லப்பட வேண்டிய அவசியம் தற்சமயம் இருக்கின்றது. தமிழ் மரபு அறக்கட்டளையின் மாணவர் மரபு மையத்தின் ஒரு பணியாகவும் இது அமையும். நம் தமிழ் மண்ணின் வரலாற்றை அறிந்த ஒரு சமூகமாக, வரலாற்றுச் சின்னங்களின் அருமை பெருமைகளை உணர்ந்த சமூகமாக நாம் திகழ முயற்சிப்போம்!

அன்புடன்

முனைவர்.சுபாஷிணி
ksubashini@gmail.com

# கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. து. சுந்தரம்

-- தேமொழி.



கோவையைச் சேர்ந்த கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. து. சுந்தரம் அவர்கள் அவினாசி பள்ளியிலும், கோவை அரசு கலைக்கல்லூரியிலும் படித்து, பி.எஸ்.என்.எல் நிறுவனத்தில் பணியாற்றியவர். தொல்லியல் ஆர்வமும் கல்வெட்டறிவும் அமையப்பெற்றதால், நடுவணரசுப் பணிநிறைவுக்குப் பின்னர், கல்வெட்டுகளைத் தேடிச் சென்று, அவற்றை ஆராய்ந்து, தகவலைப் படித்து, கல்வெட்டுகளைப் படமெடுத்து, அவற்றைப் பற்றி தானறிந்த விவரங்களை “கொங்கு கல்வெட்டு ஆய்வு” என்ற தனது வலைத்தளத்தில் தொகுத்து பதிவு செய்து வருகிறார். அத்துடன் “கல்வெட்டு எழுத்துகள் கற்போம்” என்ற தொடரின் வழியாகக் கல்வெட்டுகளை எப்படிப் படிப்பது என்று கல்வெட்டுகளைப் படிக்கும் பயிற்சியை வழங்கும் பாடங்களையும் மின்தமிழ் குழுமத்தில் தொடர்ந்து எழுதி வருகிறார். தமிழக வரலாற்றில், கல்வெட்டுகளில் ஆர்வம் உள்ள எவரும் அவரது பதிவுகளைத் தொடர்ந்து படிப்பதில் பயனடைவார்கள் என்பதில் ஐயமில்லை.

“கொங்கு கல்வெட்டு ஆய்வு” என்ற அவரது வலைத்தளத்தில் தான் மேற்கொண்ட கல்வெட்டு பயணத்தை விவரித்து, கல்வெட்டு பற்றி சேகரித்த செய்திகளை படங்களுடனும் விளக்கங்களுடனும் இவரது கட்டுரைகளின் முதற்பகுதியில் அறியத் தரும் திரு. து.சுந்தரம் அவர்கள், கட்டுரைகளின் பிற்பகுதியை கல்வெட்டுப் பாடத்திற்காக ஒதுக்கி, அவற்றில் கல்வெட்டின் வரிகளைக் கொடுத்து, அவற்றைப் படிக்கும் முறையைக் குறிப்பிட்டு விளக்கமும் தருகிறார். காட்டாகப் பின் வரும்; கல்வெட்டு எழுத்துகள் கற்போம், இராசகேசரிப்பெருவழி கல்வெட்டு, பெள்ளாதி - நடுகல் சிற்பம் புலிகுத்திக்கல் கல்வெட்டு, மதுரை அரண்மனை, சுமை தாங்கிபோன்ற பதிவுகள் சுவையான வரலாற்றுச் செய்திகள் பல அடங்கியவை.

தொல்லியல்துறை சொற்பொழிவுகளுக்கு சென்று அங்கு அத்துறை அறிஞர்களின் உரையில் கிடைக்கும் தகவல்களையும் திரு. சுந்தரம் தனது வலைத்தளத்தில் பதிவு செய்து வருகிறார். ஆர்வத்துடன் தான் திரட்டும் தொல்லியல் செய்திகளை அனைவருக்கும் உதவும் வகையில் பதிவு செய்து, கல்வெட்டுகளைப் படிக்க பயிற்சியும் அளித்துவரும் திரு. சுந்தரம் அவர்களின் தன்னார்வப் பணி தமிழக வரலாற்றைப் பற்றிய விரிவான பார்வையை பலரும் பெற உதவும் என்றால் அது மிகையன்று. திரு. சுந்தரம் அவர்களது மயிலாடும்பாறைக் கல்வெட்டு, கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்: ஜார்ஜ் மன்னர் பெயரில் ஒரு விநாயகர், கொங்கவிடங்கீசுவரர் கோவில், சோழர் ஆட்சியில் தென்னிந்தியா: முனைவர் எ.சுப்பராயலு அவர்களின் சொற்பொழிவு ஆகிய அவரது தொல்லியல், கல்வெட்டுப் பாடம் கட்டுரைகள் இந்த இதழில் இடம்பெறுகின்றன.

---



தேமொழி
themozhi@yahoo.com

---

# இந்த இதழில் .....

(மின்தமிழ்மேடை வலைத்தளத்தில் ஜூலை 16, 2015 முதல் அக்டோபர் 15, 2015 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)


**தலையங்கம்: தமிழக கல்வெட்டுக்கள்**
சுபாஷிணி ........ ii
**கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. து. சுந்தரம்**
தேமொழி ........ iv
**இந்த இதழில்** ........ vi
1. **செம்மொழி கன்னடத்தின் ஹல்மிடி கல்வெட்டு**
சேசாத்திரி சிறீதரன் ........ 1
2. **செம்மொழி தெலுங்கின் கலமல்லா கல்வெட்டு**
சேசாத்திரி சிறீதரன் ........ 11
3. **மயிலாடும்பாறைக் கல்வெட்டு**
து. சுந்தரம் ........ 17
4. **கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்: ஜார்ஜ் மன்னர் பெயரில் ஒரு வினாயகர்** - து. சுந்தரம் ........ 19
5. **கொங்கவிடங்கீசுவரர் கோவில்**
து. சுந்தரம் ........ 26
6. **சோழர் ஆட்சியில் தென்னிந்தியா: முனைவர் எ.சுப்பராயலு அவர்களின் சொற்பொழிவு** - து. சுந்தரம் ........ 40
7. **திருநாதர் குன்று - நிசீதிகைக் கல்வெட்டும், சிற்பத் தொகுதியும்** - கோ.செங்குட்டுவன், து.சுந்தரம் ........ 48
8. **நினைவலைகளில் கொடுமுடி சண்முகனார் ...**
கோ. செங்குட்டுவன் ........ 52
9. **இசைக்கும் கற்குதிரைகள்...**
கோ. செங்குட்டுவன் ........ 57
10. **களப்பிரர் கால ஸ்ரீசிகாரி பல்லவேசுவரம் - மேலச்சேரி**
கோ. செங்குட்டுவன் ........ 61

11. **வழுதாவூர் கோட்டை**
கோ. செங்குட்டுவன் ............ 66
12. **கபிலர் குன்று**
கோ. செங்குட்டுவன் ............ 69
13. **விழுப்புரம் புனித பிரான்சிஸ் சவேரியார் ஆலயம்**
கோ. செங்குட்டுவன் ............ 73
14. **விழுப்புரத்தில் எட்வர்டு நினைவுப் பூங்கா**
கோ. செங்குட்டுவன் ............ 76
15. **விழுப்புரத்தில் பாரதியின் மகளார் தங்கம்மாள் பாரதி**
கோ. செங்குட்டுவன் ............ 79
16. **உளுந்தூர்ப்பேட்டை விமான ஓடுதளம்**
கோ. செங்குட்டுவன் ............ 82
17. **ஒருங்கிணைந்த சென்னை மாகாணத்தின் முதல் முதலமைச்சர்: ஓமந்தூரார்** - கோ. செங்குட்டுவன் ............ 86
18. **அழிந்தது யானை மரம்!**
கோ. செங்குட்டுவன் ............ 93
19. **அன்பின் வெற்றி**
செல்வன் ............ 96
20. **சீன உணவகங்களின் வரலாறு**
செல்வன் ............ 100
21. **வினைவிளங்கு தடக்கை விறலோய் கேட்டி!**
இன்னம்பூரான் ............ 103
22. **“பாரத ரத்னா கே.காமராஜ்” - கர்மவீரர் காமராசர்!**
இன்னம்பூரான் ............ 106
23. **கரிசல்பூமி தந்த கனித்தமிழ்க்கவிஞன்!**
ஷைலஜா ............ 111
24. **ஓங்கி உலகளந்த உத்தமன் வருகின்றான்!**
ஷைலஜா ............ 115
25. **வினாயக சதுர்த்தி**
தமிழ்த்தேனீ ............ 118

1.

# செம்மொழி கன்னடத்தின் ஹல்மிடி கல்வெட்டு

-- சேசாத்திரி சிறீதரன்.

ஒரு மொழிக்குச் செம்மொழிச் சான்று வழங்க இந்திய அரசு சில நெறிமுறைகளைப் பின்பற்றுகிறது. அதில் ...

ஒரு மொழியின் பழைய இலக்கியங்கள் அல்லது பதியப்பட்ட வரலாறு 1,500 முதல் 2,000 ஆண்டுகள் பழமை மிக்கதாய் இருக்க வேண்டும் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இதுகாறும் 1) தமிழ் 2) சமற்கிருதம் 3) கன்னடம் 4) தெலுங்கு 5) மலையாளம் அதோடு 6) ஒடியா என ஆறு மொழிகள் இந்திய அரசால் செம்மொழிகளாக ஏற்று அறிவிக்கப்பட்டுள்ளன.

கன்னட மொழியின் பழமைக்குச் சான்றாக கருநாடகத்து அசன் மாவட்டத்தில் உள்ள பேளூர் வட்டத்தில் அமைந்த ஹல்மிடி என்ற ஊரின் கண் அமைந்துள்ள வீரபத்திரன் கோவில் முன் மைசூர் அரசின் தொல்லியல் துறை இயக்குநராக இருந்த **திரு எம். எச். கிருஷ்ணாவால் 1936 இல் கண்டறியப்பட்ட காலம் குறிப்பிடாத கல்வெட்டு ஒன்றை ஆவணமாகக் காட்டி கன்னட மொழிக்கு செம்மொழித் தகுதி பெற்றுள்ளனர்.** இக்கல்வெட்டு இக்கால் மைசூர் அருங்காட்சியக பாதுகாப்பில் உள்ளது.

இக்கல்வெட்டு 2.5 அடி உயரமும் 1 அடி அகலமும் மேலே விஷ்ணு சக்கரமும் கொண்ட செவ்வக மணற்கல்லில் 16 வரிகளில் பொறிக்கப்பட்டுள்ளது. இதன் காலம் கி.பி. 450 என அறிஞர்களால் தீர்மானிக்கப்பட்டுள்ளது. எனினும் இதன் காலம் குறித்து பல்வேறு அறிஞரிடையே முரண்பட்ட கருத்துகள் நிலவுகின்றன. இதில் பயிலும் மொழி முது பழங்கன்னடம் எனப்படுகிறது.

இக்கல்வெட்டு முதலில், கன்னடத்திற்கே உரித்தான பகர > ஹகர திரிபின்படி பல்மடியம் என அழைக்கப்பட்டு ஹல்மிடி எனத் திரிந்த ஊரின் மேற்கு வாயிலில் வைக்கப்பட்டிருந்தது அல்லது ஹல்மிடி மண் கோட்டையின் முன் வைக்கப்பட்டு இருந்தது எனவும் பின்பு வீரபத்திரன் கோவில் முன் வைக்கப்பட்டது என்றும் இருவேறு வகையில் சொல்லப்படுகிறது.

## இனி, அக்கல்வெட்டின் பாடம்:



1. jayati śri-pariṣvāṅga-śārṅga vyānatir-acytāḥ dānav-akṣṇōr-yugānt-āgniḥ śiṣṭānān=tu sudarśanaḥ

ஜயதி ஞ்ரீ பரிஸ்வாங்க ஸாரங்க வ்யானதிர் அச்ய்தா: தானவக்ஷ்னோர் யுகாந்தாக்னி சிஸ்தானான் து ஸுதர்ஸன:

जयति श्री परिस्वाङ्ग स्याङ्ग व्यानतिर् अच्युतः दानवक्स्नोर् युगान्तग्निः सिस्टान्तु सिस्टानान्तु सुदर्सनः

ಜಯತಿ ಶ್ರೀ ಪರಿಷ್ವಙ್ಗ ಶ್ಯಾಙ್ಗ [ವ್ಯಾ]ನತಿರ್ ಅಚ್ಯುತಃ ದಾನಕ್ಷೋರ್ ಯುಗಾನ್ತಾಗ್ನಿಃ [ಶಿಷ್ಟಾನಾನ್ತು ಸುದರ್ಶನಃ

jayati - வெற்றி; pariṣvāṅga - சங்கு; śārṅga - வில்; vyānatir - நீர்மேல் ஓய்வு; acytāḥ- திருமால்; dānav-akṣṇōr - அரக்கரை அழித்து தாக்கி; yugānt-āgniḥ - ஊழிமுடிவுத்தீ; śiṣṭānān=tu - நன்மை காத்து தீமை அழித்து முறை வழங்குதற்கோ

2. namaḥ śrīmat=kadaṁbapan=tyāga-saṁpannan kalabhōranā ari ka-

நம: ஸ்ரீமத் கதம்பபன் த்யாக ஸம்பன்னன் கலபோரனா அரி கா

नमः श्रीमत् कदंबपन त्याग सम्पन्नन् कलभोरना अरि

ನಮಃ ಶ್ರೀಮತ್ ಕದಂಬಪನ್ ತ್ಯಾಗ ಸಂಪನ್ನನ್ ಕಲಭೋ[ನಾ] ಅರಿ ಕ

namaḥ - சரணம்; śrīmat - of high rank or dignity; kadaṁbapan - கதம்பர் போற்றும்; tyāga-saṁpannan - ஈகை நிறைந்த; kalabhōranā ari - கலக்கம் நிகழ்த்துவோர்க்கு பகை

3. kustha-bhaṭṭōran=āḷe naridāviḷe-nāḍuḷ mṛgēśa-nā

குஸ்த பட்டோரன் ஆளி நரிதாவிலே நாடுள் ம்ருகேச நா

ककुस्थ भटटोरन आशि नरिदाविशि नाडुल् म्रगेस

ಕುಸ್ಥಭಟ್ಟೋರನ್ ಆಳೆ ನರಿದಾವಿ[ಳೆ] ನಾಡುಳ್

Bhaṭṭōran - சமற்கிருத அறிஞர்; ஆளி - பணியாள்; naridāviḷe nāḍuḷ - நரி கடக்கும், வாழும் சிற்றூருள்

4. gēndr-ābhiḷar=bhbhaṭahar=appor śrī mṛgēśa-nāgāhvaya-

கேந்த்ராபிலர் பட்டகர் அப்போர் ஸ்ரீ மிரிகேச நாகாஹ்வயர்

नागेन्द्राभीळर् भ्भटहरप्पोर श्री म्रगेस नागाह्व्यर

ಗೇನ್ದ್ರಾಭೀಳರ್ ಭ್ಭಟಹರಪ್ಪೋರ್ ಶ್ರೀ ಮೃಗೇಶ ನಾಗಾಹ್ವಯ

appor - அப்பனார்;

5. r=irrvar=ā baṭari-kul-āmala-vyōma-tārādhi-nāthann=aḷapa-

இர்வர் ஆ பட்டரி குலாமல வ்யோம தாராதி நாதன் அளப்ப

इर्व्रा बटरि कुलामल व्योम तारादि नाथन अळप

ರ್ ಇರ್ವ್ವರಾ ಬಟರಿ ಕುಲಾಮಲ ವ್ಯೋಮತಾರಾಧಿನಾಥನ್ ಅಳಪ

irrvar- இருவர்; ஆ - அந்த; kul-āmala - குலவிளக்கு; vyoma - வானத்து tara - மீன், நிலா ஆகியவற்றின் தலைவன், அளபகண -அளப்பறிய கூட்டம்

6. gaṇa-paśupatiy=ā dakṣiṇāpatha-bahu-śata-havan=ā-

கண பசுபதி ஆ தக்ஷிணாபத பஹு சத ஹவனா

गण पसुपतिया दक्षिणापथ बहुसतहवना

ಗಣ ಪಶುಪತಿಯಾ ದಕ್ಷಿಣಾಪಥ ಬಹುಶತಹವನಾ

gana - group; paśupatiy- உயிர்களின் புகலிடத் தலைவன்; dakṣiṇāpatha - தக்கணம்; bahu - மிகப்பல; śata-havan - நூறு வேள்வி

7. havuduḷ paśupradāna-śauryyōdyama-bharitōn=dāna pa-

ஹவுதுள் பசுப்ரதான செளர்யோத்யம பரிதோன் தான ப

हव्दुळ पसुप्रदान सौर्योदयम दान

ಹವದು[ಳ್] ಪಶುಪ್ರದಾನ ಶೌರ್ಯೋದ್ಯಮ ಭರಿತೋ [ನ್ದಾನ] ಪ

havdul - வேள்விஅவியுள்; pasupradana - உயிர்களின் ஓம்பலை முதன்மையாக; śauryyōdyama - பகலொளி; bharitōn - வரை

8. śupatiyendu pogaḷeppoṭṭaṇa paśupati-

சுபதியெந்து பொகளிப்பொட்டனான பசுபதி

पसुपतियेन्दु पोगलेप्पोट्टन पशुपति

ಪಶುಪತಿಯೆನ್ದು ಪೊಗೞೆಪ್ಪೊಟ್ಟಣ ಪಶುಪತಿ

pa-śupatiyendu - தானப் பசுபதி என்று; pogaḷeppoṭṭaṇa - புகழப்பட்டவனான பசுபதி

9. nāmadhēyan=āsarakk=ella-bhaṭariyā prēmālaya-

நாமதேயன் ஆசரக்கெல்லா பட்டரிய பிரேமாலய

नामदेयन आसरक्केल्ल भटरिया प्रेमालय

ನಾಮಧೇಯನ್ ಆಸರಕ್ಕೆಲ್ಲಭಟರಿಯಾ ಪ್ರೇಮಾಲಯ

nāmadhēyan - பெயரோன்; āsarak - வந்துபோகின்ற எல்லா பட்டர்கும்; prēmālaya - அன்பின் உறைவிடமான

10. sutange sēndraka-bāṇ=ōbhayadēśad=ā vīra-puruṣa-samakṣa-

சுதன்கே ஸேந்தரக பாணோபயதேசத் ஆ வீர புருஷ சமக்ஷ

सुतन्गे सेन्द्रक बणोभयदेसदा वीर पुरुष समक्षदे

ಸುತನ್ಗೆ ಸೇನ್ದ್ರಕ ಬಣೋಭಯದೇಶದಾ ವೀರಪುರುಷ ಸಮಕ್ಷದೆ

sutange - மகனுக்கு, இளவரசனுக்கு; sēndraka - of a family; samakṣa - மன்னித்து

11. de kēkaya-pallavaraṁ kād=eṟidu pettajayan=ā vija

தே கேகய பல்லவரம் காட் எறிது பெத்தஜயன் ஆ விஜ

केकय पल्लवरं कादेर्दु पेत्तजयना विजय

ಕೇಕಯ ಪಲ್ಲವರಂ ಕಾದೆಱದು ಪೆತ್ತಜಯನಾ ವಿಜ

de - காத்து; kād eṟidu (காடுஎறிந்து) - சிற்றூர் அழித்து; pettajayan - பெற்ற வெற்றி

12. arasange bāḷgaḻcu palmaḍiuṁ mūḷivaḷuṁ ko-

அரசன்கே பால்கள்சு பல்மடியம் முழிவளும் கொ

अरसन्गे बाल्गश्चु पल्मडीउम् मुशुवल्लिउम्

ಅರಸಂಗೆ ಬಾಳ್ಗೞ್ಚು ಪಲ್ಮಡಿಉಂ ಮೂೞಿವಳ್ಳಿಉಂ

vijaarasange - வெற்றி அரசனுக்கு; bāḷgaḻcu - (மணம்செய்வித்து) வாழ்க்கை அளித்து; palmaḍiuṁ - ஹல்மிடியின் முன்னைப் பெயர்; mūḷivaḷuṁ - முழுவதும்;

13. ṭṭār baṭāri-kuladōn=āḷa-kadamban kaḷadōn mahāpātakan

ட்டர் பட்டாரி குலத்தோன் ஆள கதம்பன் களத்தோன் மஹாபாதகன்

कोट्टार बटारी कुल दोनाल कदंबन कलदोन महापातकन्

ಕೊಟ್ಟಾರ್ ಬಟಾರಿ ಕುಲದೊನಳ ಕದಂಬನ್ ಕಳ್ದೋನ್ ಮಹಾಪಾತಕನ್

koṭṭār - கொடுத்தார்; āḷa - ஆளும்; kaḷadōn - அரசகுடியோன், of a royal family

14. irvvaruṁ saḻbaṅgadar vijārasaruṁ palmaḍige kuṟu-

இர்வ்வரும் சள்பகந்தார் விஜாரசரும் பல்மடிகே குறு

इर्व्वरुम् सळबङ्गदर् विजारसरुम् पल्मडीगे कुरु

ಇರ್ವ್ವರುಂ ಸಳ್ಬಙ್ಗದರ್ ವಿಜಾರರಂ ಪಲ್ಮಡಿಗೆ ಕುರು

irvvaruṁ- தந்தை மகனாகிய மிருகேசர் இருவரும்; saḻbaṅgadar - பொய் (சள்) பகன்றார்; vijārasaruṁ - வெற்றியரசர் பசுபதியும்; kuṟumbiḍi - கைப்பிடி நீர்அட்டி;

15. mbiḍi viṭṭār adān aḻivornge mahāpatakam svasti

ம்பிடி விட்டார் அதான் அழிவோர்கே மகாபாதகம் ஸ்வஸ்தி

म्पिडी विट्टार अधान अश्हिवोर्गे महापातकं स्वस्ति

ಮ್ಬಿಡಿ ವಿಟ್ಟಾರ್ ಅದಾನ ೞಿವೊನ್ಗೆ ಮಹಾಪಾತಕಂ ಸ್ವಸ್ತಿ

viṭṭār - தானம் கொடுத்தார்; அதான் - அதை; aḻivornge - அழிப்போர்க்கு; mahāpatakam - மாபாவம்; svasti - பிணிக்கும், embed.

The following line is carved on the pillar's left face:

16. bhaṭṭarg=ī gaḻde oḍḍali ā pattondi viṭṭārakara

பட்டர்க் ஈ கழதே ஒட்டலி ஆ பத்தொண்டி விட்டாரகர

भट्टर्गिगशिदे ओद्दलि आ पत्तोन्दी विट्टारकर

ಭಟ್ಟರ್ಗೀಗೞ್ದೆ ಒಡ್ಡಲಿ ಆ ಪತ್ತೊನ್ದಿ ವಿಟ್ಟಾರಕರ

bhaṭṭarg - பட்டருக்கு; ஈ - இந்த, gaḻde (களத்தை) - வேள்விச்சாலை, கொட்டகை, வீடு; oḍḍali -முழுவதும்; ā - அந்த, viṭṭārakara - தானம் கொடுத்தார்.

**கல்வெட்டு பாடப் பொருள்:**

வெற்றித் திரு விளங்க சங்கும் வில்லும் ஏந்திடும், அரக்கரைக் கொன்றும், நல்லோரைக் காத்து தீயோரை அழித்து முறைசெய்கிற சுதர்சன சக்கரத்தை ஏந்தியும் ஆழியில் ஓய்வு கொள்ளும் அச்சுதன் எனும் திருமாலே சரணம் என பாகவத புராணத்தை அடியொற்றி கடவுள் வாழ்த்து தொடங்குகிறது. உயர்மிகுபெருமை உடையவரும், கதம்பர் போற்றலுக்கு உரியவரும், ஈகை நிறைந்தவரும்,போர் என முழங்குவார்க்கு பகையென விளங்குபவருமான ககுஸ்த பட்டூரனின் பணியாளும் நரிஉலாவும் (நரித்தாவு) எனும் சிற்றூர் வாழ்நருமான மிருகேச நாகேந்திர அபிலரும், அவர் தந்தை பட்டகர் மிருகேச நாகஹவ்யரும் ஆகிய இருவரும் அந்த பட்டர் குலஒளியும், வானத்து உடுக்களின் நாயகனும், அளப்பறிய பெருங் குழுவுடையவரும், உயிர்களின் புகலிடத் தலைவனும், தக்கணத்தில் பல நூறு வேள்வி இயற்றி அவ்வேள்வியில் உயிர்களின் ஓம்பலையே முதன்மையாக வைத்து பகலொளிக் காலம் வரை கொடை தந்து தானப்பசுபதி என்று புகழப்பட்டவனான பசுபதி என்னும் பெயரினன்; தன்னை நாடிவந்து போகின்ற எல்லா பட்டர்க்கும் அன்பின் உறைவிடமான இளவரசனுக்கு அரச குடும்பத்து அம்பு எய்யும் விற்பயிற்சியை கொடுத்தனர். அதனால் அந்த வீரமகன் கேகய பல்லவரின் சிற்றூரை அழித்து பெற்ற வெற்றிக்குப் பிறகு அவனை மன்னித்துக் காத்தார். அதற்காக வெற்றி அரசர் பசுபதிக்கு மணம் முடித்துவைத்து வாழ்க்கையை ஏற்படுத்திக் கொடுத்து பல்மடியம் என்னும் ஊர் முழுவதையும் வெற்றிப் பரிசாய் தந்தார் அந்த பட்டர் குலத்தோன், ஆளும் கதம்பனான அரசக்குடியோன். மாபாவியர்களான தந்தையும் மகனுமான மிருகேசர் இருவரும் வெற்றியரசரிடத்தில் பொய் பகன்றதால் வெற்றியரசர் பசுபதியும் பல்மடியத்தை நீர்அட்டி தானம் கொடுத்தார். அந்த தானத்தை அழிப்பவரை மாபாவம் பிணிக்கும் என்பது கல்வெட்டின் நிறைவானச் செய்தி. தூணின் இடப்பக்கக் கல்வெட்டு வரி மேலுள்ள 15 வரிகளோடு சற்றும் தொடர்பு இல்லாத வகையில் "பட்டருக்கு இந்த வேள்விச்சாலையை முழுவதுமாக அந்த பத்தொந்தி தானம் கொடுத்தார்" எனக் இயம்புகிறது.

**கல்வெட்டை வடித்தவர் யார்?**

பல்மடியமாம் ஹல்மிடியை தானம் கொடுத்த வெற்றியரசர் இக்கல்வெட்டை வெட்டியிருந்தால் அவருடைய மெய்க்கீர்த்தி அதில் இடம்பெற்றிருக்கும். அப்படி எந்த அரசருடைய மெய்க்கீர்த்தியும் இக்கல்வெட்டில் இடம்பெறவில்லை. மேலும், மன்னன் என்பவன் தன் அதிகாரத்தின் மீதும் படையின் மீதும் முழு நம்பிக்கை உடையவன் ஆதலின் இந்த அறத்தை அழித்தவர் மாபாவி ஆவார் என்று சாவித்து தன் இயலாமையை காட்டிக்கொள்ள மாட்டான். தூணின் இடப்பக்கம்

பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டின் 16 ஆம் வரிச் செய்தி மேல் உள்ள மற்ற செய்தியோடு தொடர்புடையதாக இல்லாமல் யாரோ பத்தொந்தி என்பவர் பட்டருக்கு வேள்விச் சாலையை தானம் கொடுத்ததாகக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில் அதிக அளவு சமற்கிருத சொற்கள் ஆளப்பட்டுள்ளன என்பதும் இதனை வெட்டியவர்கள் அவ்வூர் பிராமணரே என்பதை உறுதிப் படுத்துகிறது. எனவே இக்கல்வெட்டு முதன் முதலில் மண் கோட்டை அல்லது மேற்கு வாயிலில் இருந்தது பின்னர் ஒருகாலத்தில் வீரபத்திரன் கோவில் முன் கொண்டுவந்து வைக்கப்பட்டது என்பது உண்மைக்கு மாறானது. உண்மையில், பிராமணரால் வெட்டப்பட்ட இக்கல்வெட்டு பிராமணர் ஆளுகை செலுத்தும் வீரபத்திரன் கோவில் முன்பு தான் தொடக்கம்முதலே வைக்கப்பட்டு இருந்திருக்க முடியும். மண் கோட்டை பிராமணர் ஆளுகைக்கு உட்படுவ்தல்ல ஆதலால் அங்கு இக்கல்வெட்டை முதன்முதலாக வைத்திருந்திருக்க முடியாது.

கல்வெட்டை ஆழ்ந்து படிக்குங்கால் இதில் குறிக்கப்படும் கதம்ப மன்னன் ககுஸ்தனுக்கும் வெற்றியரசன் பசுபதிக்கும் எவ்வகை உறவு இருந்தது என்பதை அறிய இயலவில்லை. வெற்றியரசன் பசுபதி தான்வெற்றிப் பரிசாகப் பெற்ற பல்மடியத்தை தானம் செய்துவிடும் அளவிற்கு தந்தையும் மகனுமான மிருகேசர் இருவரும் அவன்பால் அளவிறந்த செல்வாக்கு கொண்டிருந்தனர் என்பது தெரிகின்றது. முத்தாய்ப்பாக பல்மடியத்தின் மீது ஒருகாலத்தே அளவற்ற உரிமை பெற்றிருந்த பிராமணர்கள் அந்த உரிமைக்கு அதுபோது இடர் ஏற்படுவதை உணர்ந்து என்றோ எப்போதோ நிகழ்ந்த ஒரு நிகழ்வைச சான்றாகக் காட்டி அதன் மூலம் இந்த பல்மடியம் தமக்குக் முன்னமேயே சொந்தமாகியது என்று கல்வெட்டு வடித்து தம் உரிமையை வலுப்படுத்திக்கொள்ள முயன்றுள்ளனர் என எண்ணத் தோன்றுகிறது.

பல்மடிய தானநிகழ்வைக் குறிக்கமுடிந்த பிராமணரால் மிருகேசர் இருவரது ஊரின் பெயரை மட்டும் தெளிவாகக் குறிப்பிட முடியாமல் நரிஉலாவும் இடம் என்கின்றனர். இந்த இருவர் வெற்றியரசரிடம் சொன்ன பொய் என்ன என்பதும் குறிக்கப்படவில்லை. கல்வெட்டில் உள்ள அத்தனைக் கன்னடச் சொற்களும் தமிழின் திரிபுச் சொற்களே. அதனால் தமிழ் அகராதியின் துணை வேண்டப்படுகிறது.

**<u>கல்வெட்டின் காலம் எது?</u>**

கல்வெட்டில் காலக் குறிப்பு ஏதும் இடம்பெறவில்லை. கதம்பன் ககுஸ்தன் என்ற பெயர் இடம்பெறுவதை மட்டுமே கருத்தில் கொண்டு இக்கல்வெட்டு கி.பி.450 இல் வடிக்கப்பட்டது என்றுஅறிஞர் முடிவு கொண்டு விட்டனர். இது ஒரு தவறான

அணுகுமுறை. இதில் இடம்பெறும் பிற செய்திகளையும், மொழிநடையையும், மக்கள் நம்பிக்கைகளையும் நோக்கித் துலக்கமாக இக்கல்வெட்டின் காலத்தை குறித்திருக்க இயலும். கல்வெட்டறிஞர்கோவிந்த சுவாமி கய் என்பவர் இக்கல்வெட்டில் இடம்பெறும் கதம்பன் ககுஸ்தன் என்பவன் கதம்ப ஆள்குடியின் அரசன் ககுஸ்தவர்மன் அல்லன் மாறாக இவன் பட்டாரி குலத்தைச் சேர்ந்த வேறு ஒரு அரசன், ஏனெனில் கல்வெட்டில் மானவ்ய கோத்திர, ஹாரிதீ புத்திர அதோடு முகாமையாக தரும மகாராஜ போன்ற கதம்ப மன்னர் பட்டப்பெயர்கள் குறிக்கப்படவில்லை என்கிறார். இக்கல்வெட்டில் கன்னடம் பீடுநடை போடுவதால் இது கன்னடக் கல்வெட்டு என்பதில் ஒருசிறிதும் ஐயம் இல்லை. அதே நேரம் இக்கல்வெட்டில் மக்கள் மொழியில் இடம் பெறாத சமற்கிருதச் சொற்கள் பேரளவில் இடம் பெறுகின்றன. தென்னகத்தில் சமற்கிருத மொழி 6 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தான் அறிமுகமானது, அரசமொழியானது என்பதை நோக்க இக்கல்வெட்டின் காலம் கி.பி. 450 என்ற கருத்து அடிபட்டுப் போகிறது.

மேலும்,  இக்கல்வெட்டின் தொடக்கத்தில் இலக்கித்துள்ள விஷ்ணுவின் பெருமைகள் கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் வாதராயண வியாசரால் இயற்றப்பட்ட ஸ்ரீமத் பாகவத புராணக் கருத்தை உள்வாங்கி சமற்கிருத மொழியில்  எழுதப்பட்டதாகும். பாகவத புராணம் தென்னகத்தில் பரவிய பிறகே கி.பி. 8 ஆம் நூற்றாண்டிளவில்  ஆழ்வார்கள் தோன்றி திருமாலைப் பாடிப்பரவினர். உண்மையில், புராணங்கள் வெகு காலத்திற்கு முன்னமேயே இயற்றப்பட்டிருந்தால் ஆழ்வார்கள் இன்னும் முன்னமேயே தோன்றியிருப்பர் என்பதே உண்மை. அதோடு, கற்றளிக் கோவில் இயக்கமும் கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் தான் தொடங்கியது என்ற கருத்தை பொருத்திப் பார்த்தால் வீரபத்திரன் கோவிலும் கி.பி. 8 ஆம் நூற்றாண்டின் பின்னேயே தோன்றியிருக்க முடியும். அதனால் இக்கல்வெட்டும் அதன் பிற்பாடு தான் வெட்டப்பட்டிருக்க முடியும்.

பாவம், புண்ணியம், அறம் ஆகிய கருத்துகள் கி.பி. 7 ஆம் நூற்றாண்டளவில் தென்னகத்தில் புராணங்கள் வழியே  பரவிய பின்பு தான் மக்கள் நெஞ்சில் இடம் கொண்டன. அதற்கு முன் பாவம், புண்ணியம் ஆகிய கருத்துகள் மக்களிடையே இருந்ததில்லை. கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் இல்லாத ஒரு கருத்து கி.பி. 5 ஆம் நூற்றாண்டின்  கல்வெட்டில் இடம்பெற்றிருக்க முடியாது. முதன் முதலாக அரசர் அல்லாத பிறவோரால் வெட்டப்பட்ட கி.பி. 9 - 10 ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகளின் எழுத்து நடை அமைப்பில் தான் இந்த பாவம்,  புண்ணியம், அறம் ஆகிய கருத்துகள் இடம்பெறுகின்றன. காட்டாக, இந்த அறம் அழித்தார் காராம் பசுவைக் கொன்ற

பாவத்தை அடைவர், கங்கைக் கரையை இடித்த பாவத்தை அடைவர், இந்த அறம் காத்தார் கால்மேல் என் தலை ஆகிய கருத்துகளை காணவியல்கிறது. இதே போல் இக்கல்வெட்டிலும் மாபாதகன், மாபாதகம் ஆகிய சொற்கள் ஆளப்படுவது இந்த கல்வெட்டின் காலத்தை கி.பி. 9 - 10 ஆம் நூற்றாண்டுகளுக்கு நடுவே அல்லது 11 ஆம் நூற்றாண்டில் வைக்கின்றது. இதற்கு சான்றாக கீழே இரு கல்வெட்டுகள் எடுத்துக் காட்டாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

**மேற்காணும் காரணங்களால் இந்த ஹல்மிடி கல்வெட்டு கன்னடத்திற்கு செம்மொழி ஆவணமாகக் காட்டுவதற்கு பொருத்தமற்றதாக உள்ளது என்ற முடிவிற்கு இட்டுச்செல்கிறது.** இதே போல தெலுங்கைச் செம்மொழியாக அறிவித்தற்கு பழமைச் சான்றாக காட்டப்பட்ட கடப்பை மாவட்ட கமலாபுரம் வட்டத்தில் அமைந்த எர்றகுடிபாலேம் என்ற ஊரின் கண் அமைந்த சென்னகேசவ பெருமாள் கோவில் வளாகத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்று கி.பி. 575 இல் ஆட்சிபுரிந்த எரிகல் முத்துராஜனின் காலத்தது என்று சொல்லப்பட்டுள்ளது. தென்னகத்தில் கற்றளிகள் கி.பி 8 ஆம் நூற்றாண்டில் தான் முதன்முதலாக கட்டப்பட்டன எனும் போது இக்கல்வெட்டும் அந்த கோவிலும் எவ்வாறு கி.பி 6 ஆம் நூற்றாண்டில் வெட்டப்பட்டிருக்க முடியும் என்ற வலுவான கேள்வி எழுகிறது.

**<u>எடுத்துக் காட்டு கல்வெட்டுகள் :</u>**

1. இராசராசனின் தமையன் ஆதித்த கரிகாலன் காலத்தைச் சேர்ந்த இக்கல்வெட்டில் ஆதித்த கரிகாலன் "வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பரகேசரி" எனக் குறிப்பிடப்பெறுகிறான். ஔகண்டனாகிய சிங்க முத்தரையன் என்பவன் ஊருக்கான ஏரியைப் பராமரிப்பதற்காக அரைக்(காணி) நிலம் வரி நீக்கிக் கொடுத்ததோடு ஏரியின் மேலைப் பகுதியில் கல்லால் ஆகிய தூம்பும் செய்து கொடுத்துள்ளான். கல் தூம்பை காத்தவர் பாதம் என் தலைமேல் இருப்பதாகக் கடவது என்றும் அழித்தார் கங்கை குமரியிடை வாழும் மக்கள் யாவரும் செய்த பாவத்தை அடைவர் என்றும் குறித்துள்ளார். ஏரியைப் பராமரிக்க அளிக்கப்படும் நிலக்கொடை "ஏரிப்பட்டி" என்று குறிப்பிடப்படுகிறது. "பட்டி" என்பது நிலத்தைக் குறிக்கும். கல்வெட்டுப்பாடம் பின்வருமாறு.

ஸ்வஸ்திஸ்ரீ வீரபாண்டியனைத்தலை / கொண்ட கோப்பரகேசரி ப(ந்)மற்கு யாண்டு / ............வது மிலாடுக்குறுக்கைக் /கூற்றத்து ..... உடைய ...ஔகண்டனாகிய சிங்க / ....னேன் இவூர்க்கு நஞ்செயரை / ..(ஏ)ரிப்பட்டியாக இறைஇழிச்சி உ(ப)

யஞ்செய்த அட்டிக்குடுத்தேன் சிங்க(மு) / தரையனேந் இத்தர்மம் ரக்ஷித்தான் பா / தம் என்றலைமேலன இதிறக்கினான் கெ /
ங்கையிடைக் குமரியிடைச் செய்தார் செய் /தார் செய்த பாவமெல்லாங்கொள்வான் மேலை கற்றூபும் இட்டாருமிவரே

2. மேலை கங்க அரசன் நரசிம்ம வர்மனுக்கு பதினெட்டாவது ஆட்சியாண்டில் சன்மதூரன் அதிவாரண்டர சாத்தையன் தன் முக்கூடுர் புன்செய், நன்செய் நிலத்தையும் குடியிருந்த வீட்டையும் கைநீரட்டி தானமாக கொடுத்தோம் இதைக் காத்தார் கால்மேல் என் தலையை வைத்ததாகக் கடவது என்று குறிப்பிட்டு தான் செய்த அறத்தை மறத்தல் வேண்டாம் என்று கல்வெட்டில் இலக்கித்துள்ளார்...

ஶ்ரீ கோ விசிய நரசிங்க பருமற்கு / யாண்டு பதினெட்டாவது சன்மதூ / ரண்டாம் அதிவாரண்டர சாத்தைய னார்க்கு முக் / கூடூர் அவருடைய புன் புலமும் நன் புலமும் / அவர் இருந்த மனையும் பரபு / செய்த ஒன்று கை நீற்றீர் பெய் / து பிரமதாயன் கொடுத்தோம் இ / து காத்தார் கால் மேல் என் / றலை அறம(றவர்க) கீழ் முட்டுகூர், குடியாத்தம் வட்டம் கல்வெட்டு SII XX பக் 178

---



சேசாத்திரி சிறீதரன்
கல்வெட்டு ஆர்வலர்
sseshadri69@gmail.com

---

## 2.

# செம்மொழி தெலுங்கின் கலமல்லா கல்வெட்டு

-- சேசாத்திரி சிறீதரன்.

நடுவண் பண்பாட்டு அமைச்சகம் தெலுங்கிற்கான செம்மொழி வல்லுநர் குழு ஒன்றை அமைத்து அதன் பரிந்துரையின்படி 2008 நவம்பரில் இல் தெலுங்கைச் செம்மொழியாக அறிவித்தது.

இதற்கு 1,500 முதல் 2,000 ஆண்டுகள் பழைமை உடைய இலக்கியங்கள் அல்லது பதியப்பட்ட வரலாறு இருக்க வேண்டும் என்ற கோட்பாட்டின் அடிப்படையில்1904 இல் சென்னையில் இருந்து செயற்பட்ட இந்தியத் தொல்லியல் துறையினர் மேற்கொண்ட கள ஆய்வில் கடப்பை மாவட்டம் கமலாபுரம் வட்டம் ஏற்ரகுடிபாலேம் கலமல்லா ஸ்ரீ **சென்னகேசவ பெருமாள் கோவிலில் கண்டு அறியப்பட்ட ரேனாட்டு சோழன் எரிகல் முத்துராசு தனஞ்செயன் பற்றிய கல்வெட்டு எழுத்தமைதியால் பழமையானது இதாவது, கி.பி. 575 ஆம் நூற்றாண்டினது என்று முடிவு செய்யப்பட்டு அதை நடுவண் பண்பாடு அமைச்சகத்திற்கு சான்று ஆவணமாகக் காட்டியுள்ளனர்.**

ரேநாடு என்பது இற்றைய இராயல்சீமையின் கடப்பை மாவட்டத்தைச் சுற்றி அமைந்த நாட்டுப் பகுதியாகும். இதை ஆண்ட தெலுங்கு சோழர்கள் ரேநாட்டுச் சோழர்கள் எனப்பட்டனர். யுவான் சுவாங்கின் பயணக் குறிப்பில் உள்ள "சுளியர்" என்பதை மேற்கோளாகக் கொண்டு சிலர் தெலுங்கு சோழர்களை கி.பி 7 ஆம் நூற்றாண்டு முதல்13 ஆம் நூற்றாண்டுவரை ஆண்டவர்கள் என்று கூறுவது உண்டு.

இக்கல்வெட்டு கோவில் வளாகத்தில் கிடத்தப்பட்டிருந்த உடைந்த தூணின் இரண்டு பக்கங்களில்17 வரிகளில் வெட்டப்பட்டுள்ளது. இதில் நான்கு வரிகள் (12 - 15) சிதைந்து உள்ளன. அதை சென்னைக்கு கொண்டுவந்து தொல்பொருள் சேமிப்பில் வைத்திருந்துள்ளனர். ஆனால் இப்போது அக்கல்வெட்டு காணாமல் தொலைக்கப் பட்ட நிகழ்வு தொல்லியல் ஆர்வலர்களை பெரிதும் வருத்தமுறச் செய்துள்ளது. இனி, இக் கல்வெட்டு பாடமும் விளக்கமும்.

| | | |
|---|---|---|
| 1. .................. | | |
| 2. కల్ముతురా | kalmutura | கல்முத்துரா |
| 3. జు ధనంజ | ju dananja | ஜு தனன்ஜ |
| 4. య రు రేనా | ya ru raena | ய று ரேனா |
| 5. ణ్డు ఏళన్ | ndu elen | ண்டு ஏளன் |

6. చిఱుంబూరి chirumburi சிறும்பூரி

7. రేవణకాలు (పం) raevanakalu (pam) ரேவண காலு(பம்)

8. పు చెనూరు కాజు pu chenuru kaju பு செனூரு காஜு

9. ఆఱికాశా ఊరి arikasa ori அறிகாசா0 ஊரி

10. ణ్డవారు ఊరి ndavaru ori ண்டவாரு ஊரி

11. న వారు ఊరిస... na vaaru orisa னவாரு ஊரிச

12.

13.

14.

15.

16. హాపాతకస hapatakasa ஹபாதகச

17. కు. ku கு



## <u>கல்வெட்டு பாடம்:</u>

......../ కల్ముతురా / జు ధనంజ / య ఱు రేనా / ణ్డు ఏళన్ / చిఱుంబూరి / రేవణకాలు / (పం) పు చెనూరు కాజు / ఆఱికాశా ఊరి / ణ్డవారు ఊరి / న వారు ఊరిస.../ హాపాతకస / కు

... / கல்முத்துரா / ஜு தனஞ்ஜ / ய ரு ரைனா / ண்டு ஏலன் / சிறும்பூரி /ரைவணகாலு (பம்) / பு செனூரு காஜு / அரிகாசா ஊரி / ண்டவாரு ஊரி / னவாரு ஊரிச .... / ஹபாத கச / கு

..... / kalmutura / ju dananja / ya ru raina / ndu elen / chirumburi / raivanakalu (pam) / pu chenuru kaju / arikasa ori / ndavaru ori / na vaaru orisa.... / hapatakasa / ku

Dhananjaya - செல்வத்தை வென்றவன், அருச்சுனனின் மற்றொரு பெயர்: இலக்கிய பதிவு: Srimad Bhagavatam 1.9.3; ரேவண்த - இந்த கல்பத்தின் 5 ஆவது மனுவின் பெயர் , சூரியனின் ஒரு மகனுக்கு பெயர்; ஏலன் - to oppose, battle ; காலு (கால்) - மகன், கால்வழி, காலாட்படை; ஆரிகாசா - கொக்கரித்து ஆரவாரித்து போருக்கு எழுந்து வெளியேவந்தான்; இண்டு + அர் = இண்டர் - இடையர், இழிகுலத்தோர் "இண்டக்குலத்தை" திவ். திருப்பல் 5; pata kasaku - (கசகுதல்) - பின்வாங்குதல்.

**<u>கல்வெட்டுப் பொருள்:</u>**

எரிகல் முத்துராஜு தனஞ்சயருடைய ரைநாட்டை எதிர்த்து போரிட சிறும்பூர் ரேவண்ணன் காலாட்படையை அனுப்பிட செனூர் காஜு கொக்கரித்து ஆரவாரித்து போருக்கு கிளம்பினான். அப்போது ஊர்ப்புறத்தே வாழும் இழிகுலத்தோரும் (ஏழை எளியவர்), ஊரகத்தோரும் ஊரின் ( ஒரு பகுதியில் குழுமினர்) - - - - நடையை பின்வாங்கினர்.

தமிழின் "அவன்" என்ற ஆண் பால் ஒருமை கோண்டி மொழியில் "அவண்டு" என வழங்குகிறது. கோண்டி மொழியின் தாக்குறுத்தம் காரணமாக அவண்டு > வ+அ+ண்டு > "வாண்டு" என மொழி முதல் அகரம் இரண்டாம் இடம் பெயர்ந்து தெலுங்கில் வழங்குகிறது. அதுவே ரேவண்டு என்று பெயரோடு இக்கல்வெட்டில் வாங்குகிறது. அதே போல் தமிழில் "அவர்" என்ற பலர் பால் படர்க்கை சொல்லின் மொழி முதல் அகரம் இரண்டாம் இடம் பெயர்ந்து வ+அ+ர் = வார் > "வாரு" என தெலுங்கில் வழங்குகிறது. இக்கல்வெட்டில் ஊரிண்டவாரு, ஊரினவாரு ஆகியசொற்களில் பயில்கிறது. இச்சொல்லாட்சிகள் இக்கல்வெட்டை தெலுங்கு என உறுதி செய்கின்றன.

**<u>கல்வெட்டை வெட்டியோர் யாவர்?</u>**

ரைநாட்டு சோழன் தனஞ்சயனின் மெய்கீர்த்திகளோ அல்லது ரைவணனின் அரச பின்னணிக் குறிப்புகளோ இக்கல்வெட்டில் இடம்பெறவில்லை ஆதலால் இது அரசர் வெட்டிய கல்வெட்டு அல்ல. கல்வெட்டில் ஆள் பெயர்கள் தவிர சமற்கிருத சொற்கள் ஏதும் இல்லை. பிராமணர்கள் வெட்டியிருந்தால் தமது சமற்கிருத அறிவை வெளிக்காட்ட சில சமற்கிருத சொற்களையேனும் திணித்திருப்பார் அப்படியில்லாததால் இக்கல்வெட்டை பிராமணர்களும் வெட்டியிருக்க முடியாது. கல்வெட்டில் மக்கள் மொழி அதிகம் ஆளப்படுவதாலும் இதில் ஐயம் திரிபற தெலுங்கு மொழி வீறுநடை போடுவதாலும் படையெடுப்பின் காரணமாக பெருந்துன்பத்திற்கு ஆளான ஊர் மக்கள் படை நடத்தி வந்தோர் தம்நடையைப் பின்வாங்கியதை அடுத்து துயர் நீங்கியவராக கோவிலில் இக்கல்வெட்டை வெட்டியிருக்கவேண்டும்.

**கல்வெட்டின் காலம்:**

தென்னிந்திய கல்வெட்டுகள் தொகுதி 10 ல் இக்கல்வெட்டின் காலம் குறித்தோ அல்லது எழுத்தமைதி மிகப் பழமையானது என்றோ எந்தக் குறிப்பும் இல்லை. கல்வெட்டிலும் காலக் குறிப்பு ஏதும் இல்லை.

(South Indian Inscriptions Vol. X Early Cholas of Renadu

No. 607. (A. R. No. 380 of 1904.)

On two faces of a broken pillar lying in the court-yard of the temple of Chennakesavasvami at Kalamalla, Kamalapuram Taluk, same District. Undated.
Damaged and unintelligible. Mentions Dhananjaya and Rena[ndu].)

அப்படியிருக்க இக்கல்வெட்டே தெலுங்கு மொழியின் முதல் பழமையான கல்வெட்டு என்று எதன் அடிப்படையில் முடிவு கொண்டனர் என்று விளங்கவில்லை. எரிகல் முத்துராஜு என்ற பெயருடன் தனஞ்சயன் பெயர் இடம் பெறுவதாலேயே இது மிகப் பழமையானது கி.பி. 575 ஆண்டினது என்று முடிவு கொண்டிருந்தால் அது பிழையானது. ஏனெனில் எரிகல் முத்துராஜு புண்ணியகுமார என்ற பெயரில் இன்னொரு அரசனும் இருந்துள்ளான். ஆதலால் பிற்கால அரசர் சிலர் எரிகல்முத்துராஜு என்ற மூதாதையின் பெயரை தம் பெயரோடு இணைத்துக் கொண்டார்கள் என்று கருதுவதே சரி. சிலர் தனஞ்சயன் என்பது எரிகல் முத்துராஜுவின் பட்டப் பெயர்களுள் ஒன்று என்று கதை அளக்கின்றனர். இதுவும் தவறே.

தனஞ்சயன், ரேவண் ஆகிய பெயர்கள் புராணப் பெயர்கள். தனஞ்சயன் என்ற பெயர் முதன் முதலாக கி.பி. 7 ஆம் நூற்றாண்டில் வாதராயண வியாசர் இயற்றப்பட்ட பாகவத புராணத்தில் தான் இடம் பெறுகிறது. அதற்கு முன்னம் இப்பெயர் பரவியிருக்க வாய்ப்பில்லை. அதோடு இக்கல்வெட்டு கலமல்லா ஸ்ரீ லக்ஷ்மி சென்னகேசவ பெருமாள் கோவிலின் திறந்தமுற்றத் தரையில் கிடத்தப் பட்டிருந்த உடைந்த தூணின் இரு பக்கங்களில் வெட்டப்பட்டிருந்தது என்று தென்னிந்திய கல்வெட்டுகள் தொகுதி 10 இல் பதியப்பட்டுள்ளது.

பாறைகளை செதுக்கி கற்றளிகள் கட்டுவது தென்னிந்தியாவில் முதன்முதலாக 8 ஆம் நூற்றாண்டில் தான் ராசசிம்மப் பல்லவனால் தொடங்கி வைக்கப்பட்டது. இக்கல்வெட்டு திறந்த வெளியில் நிறுத்தப்பட்ட கல்வெட்டு அல்ல மாறாக கற்றளியின் ஒரு தூணில் இருபக்கங்களில் வெட்டப்பட்ட கல்வெட்டு எனும்போது இது 6 ஆம் நூற்றாண்டு கல்வெட்டாக இருக்க முடியாது 8 ஆம் நூற்றாண்டிற்கு பிற்பட்ட கல்வெட்டாகத் தான் இருக்க முடியும். மேலும் கல்வெட்டில் இழிந்த குலத்தோர் என்ற குறிப்பு இக்கல்வெட்டின் காலத்தை இன்னும் பின்னுக்கு தள்ளுகிறது. புராண இந்து மதம் பரவிய பின்பு 9 - 10 ஆம் நூற்றாண்டுகளில் தான் பிறப்பு வழி ஏற்றத் தாழ்வுகள் மக்கள் கருத்தில் வேரூன்றின. ஆகவே இக்கல்வெட்டு 10 ஆம் நூற்றாண்டளவில் வெட்டப்படிருக்க வேண்டும் என்று கருதவே இடம்

தருகிறது. **எனவே தெலுங்கைச் செம்மொழி என காட்டற்கு இக்கல்வெட்டிற்கு சற்றும் தகுதி இல்லை.** ஏனெனில் இதனினும் பழமையான தெலுங்கு நடுகல் கல்வெட்டுகள் உள்ளன.

1904 இல் இக்கல்வெட்டு முதன் முதலாக அறியப்பட்ட போது அதைப் படித்தவர்களுக்கு அக்கால் போதிய தரவுகள் இல்லாமையால் இதன் காலத்தை தவறாகவே குறித்திருந்தாலும் செம்மொழிக்கு தகுதிச் சான்றாக இக்கல்வெட்டை பரிந்துரைக்கும் முன் அறிஞர்கள் இதன் காலத்தை மீள்பார்வை செய்திருந்தால் தவறு நேராமல் தவிர்த்திருக்க இயலும். மேலும், கன்னட தெலுங்கு கல்வெட்டுகளை படிக்கின்ற போது சமற்கிருத அகராதிகளை மட்டும் பார்வையிடுகின்ற கல்வெட்டு அறிஞர்கள் தமிழ்ச் சொற்களுக்கு தமிழ் அகராதிகளை நாடுவதில்லை என்பது தவறான புரிதலைத்தான் தரும். இக்கல்வெட்டில் உள்ள தமிழ்ச் சொற்களின் பொருள் அறிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரரகரமுதலி http://www.tamilvu.org/library/ldpam/ldpam00/html/ldpam00hom.htm உதவியது.

இக்கல்வெட்டில் நான்கு (12 - 15) வரிகள் சிதைந்து போனதால் கல்வெட்டின் முழுப் பொருளையும் தெளிவாக அறியமுடியவில்லை. செனூர் காஜு தனஞ்சயன் சார்பில் போரில் பங்கு கொண்டானா அல்லது ரேவண்ணன் சார்பில் போரில் கலந்து கொண்டானா என்று தெரியவில்லை. நடை பின்வாங்கிய படை யாருடையது என்பதும் விளங்கவில்லை.

**<u>கால் காலாட்படையை குறிப்பதை காட்டும் கல்வெட்டு சான்று:</u>**

பிரையகம் யெறிந்த / க் கால்லப் போருட்ப / ட்டான் தெருக்கால்லா / ரு மகன் நீலகண்ட(ரைச) / ன் கல்

கால்லர் - காலாட்படையர் (Infantry); தெருக்கால்லார் - தெருக் காவல் மேற்கொள்ளும் காலாட்படை தலைவர்

பிரையகம் என்ற இடத்தை அழித்த காலாட்படையர் போரில் தெருக்காவல் மேற்கொள்ளும் காலாட்படைத் தலைவரின் மகன் நீலகண்ட அரைசன் வீரசாவடைந்தான். அவன் நினைவில் நட்ட நடுகல் இது. பண்டு நகரங்களின் தெருக்காவலுக்கு காலாட்படையே ஈடுபடுத்தப்பட்டது. அவ்வாறான ஒரு படை பிரையகம் என்ற இடத்தில் போரில் ஈடுபட்டு அதை அழித்து உள்ளது. இது நகர் முற்றுகைப் போர் ஆகலாம். அப்போரில் அப்படையின் ஒரு ஆள், இதாவது, அரைசர் பொறுப்பில் இருந்த நீலகண்டன், படைத் தலைவரின் மகன் இறந்துள்ளான். எளியோரும் அரைசர் ஆகி உள்ளனர் என்பதற்கு நீலகண்டன் ஒரு சான்று. கல்வெட்டில் அரசன் பெயர், ஆட்சி ஆண்டு குறிப்பிடாமல் உள்ளது. இக்கல்வெட்டு தமிழ் பிராமியில் இருந்து வட்டெழுத்து பிரியும் காலகட்டத்து எழுத்து பொறிப்பில் உள்ளது, மெய்எழுத்து புள்ளிகளுடன் உள்ளன. எனவே விஷ்ணு வர்மனின்

இருளப்பட்டி கல்வெட்டிற்கும் முந்தையது இது எனலாம். இதை 3 - 4 ஆம் நூற்றாண்டினது எனக் கொள்ளலாம்.







**<u>தொடர்புடைய தொடுப்புகள்:</u>**

http://indiantempleslist.blogspot.in/2014/11/sri-lakshmi-chenna-kesava-swamy-temple-yerragudipadu-kamalapuram-kadapa.html

http://www.thehindu.com/todays-paper/tp-national/tp-andhrapradesh/first-telugu-inscription-missing/article4590145.ece

http://www.newindianexpress.com/states/andhra_pradesh/article1534370.ece

http://www.thehindu.com/news/national/classical-status-for-telugu-kannada-sc-declines-to-intervene/article75642.ece

---



சேசாத்திரி சிறீதரன்
கல்வெட்டு ஆர்வலர்
sseshadri69@gmail.com

---

3.

# மயிலாடும்பாறைக் கல்வெட்டு

--து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.

விழுப்புரம் மாவட்டம், திருக்கோயிலூர் வட்டம், பொ. மெய்யூர் என்னும் சிற்றூரில் மயிலாடும்பாறை என ஊர் மக்கள் குறிப்பிடும் பாறையில் ஒரு கல்வெட்டைக் கண்டிருக்கிறார் அவ்வூரைச் சேர்ந்த ச.குப்பன் என்பவர். அக்கல்வெட்டின் ஒளிப்படத்தை அனுப்பியிருந்தார்.



அது ஓர் அருமையான கல்வெட்டு. இராசராசனின் தமையன் ஆதித்த கரிகாலன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டு. கல்வெட்டில் ஆதித்த கரிகாலன் "வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பரகேசரி" எனக்குறிப்பிடப்பெறுகிறான்.

ஒளக் கண்டனாகிய சிங்க முத்தரையன் என்பவன் ஊருக்கான ஏரியைப் பராமரிப்பதற்காக அரைக்(காணி) நிலம் வரி நீக்கிக் கொடுத்ததோடு ஏரியின்

மேலைப் பகுதியில் கல்லால் ஆகிய தூம்பும் செய்து கொடுத்துள்ளான். ஏரியைப் பராமரிக்க அளிக்கப்படும் நிலக்கொடை "ஏரிப்பட்டி" என்று குறிப்பிடப்படுகிறது. "பட்டி" என்பது நிலத்தைக்குறிக்கும். சில நடுகற்களில் வருகின்ற "உதிரப்பட்டி" என்னும் சொல்லை ஒப்பிடுக. இறந்த வீரனின் குடும்பத்தாருக்கு (இரத்த உறவு உள்ளவர்) நிலம் கொடையாக அளிக்கப்படுவதை "உதிரப்பட்டி" என்பார்கள். கல்வெட்டுப்பாடம் கீழே தரப்பட்டுள்ளது.

**<u>கல்வெட்டுப்பாடம்:</u>**

ஸ்வஸ்திஸ்ரீ வீரபாண்டியனைத்தலை
கொண்ட கோப்பரகேசரி ப(ந்)மற்கு யாண்டு
............வது மிலாடுக்குறுக்கைக் கூற்றத்து
..... உடைய ...ஔகண்டனாகிய சிங்க
....னேன் இவூர்க்கு நஞ்செயரை
..(ஏ)ரிப்பட்டியாக இறைஇழிச்சி உ(ப)
யஞ்செய்த அட்டிக்குடுத்தேன் சிங்க(மு)
தரையனேந் இத்தர்மம் ரக்ஷித்தான் பா
தம் என்றலைமேலன இதிறக்கினான் கெ
ங்கையிடைக் குமரியிடைச் செய்தார் செய்
தார் செய்த பாவமெல்லாங்கொள்வான்
மேலை கற்றூபும் இட்டாருமிவரே

"கற்றூபும்" எனப்பிழையாகப் பொறித்திருக்கிறார்கள். "கற்றூம்பும்" என்பதே சரி. கல்+தூம்பு=கற்றூம்பு.

---



திரு. து. சுந்தரம்
கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.
doraisundaram18@gmail.com
அலை பேசி : 9444939156

---

**4.**

# கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்: ஜார்ஜ் மன்னர் பெயரில் ஒரு விநாயகர்

--து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.

**ஜார்ஜ் மன்னர் பெயரில் ஒரு வினாயகர்**

விழுப்புரம் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் சி.வீரராகவன், கோவை கல்வெட்டு ஆராய்ச்சியாளர் து.சுந்தரம் ஆகியோர், அண்மையில் தாராபுரம் பகுதியில் கள ஆய்வு மேற்கொண்டபோது அலங்கியம் ஊரில் பேருந்து நிறுத்தம் மற்றும் காவல் நிலையம் அருகில் அமைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய பிள்ளையார் கோவில் மேடையில் ஒரு கல்வெட்டைப்பார்த்தனர். நெடுஞ்சாலைகளில் காணப்படும் மைல்கல்லின் வடிவத்தில் அக்கல்வெட்டு அமைக்கப்பட்டிருந்தது. அகலமான அதன் முன்பக்கத்துப்பரப்பில் ஆங்கிலத்தில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தன. அகலம் குறைவாயுள்ள அதனுடைய பக்கவாட்டு முகங்கள் இரண்டிலும் தமிழில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தன.





ஆங்கிலத்தில் பொறிக்கப்பட்ட எழுத்துகள் பெரிய அளவில் தெளிவாகக் காணப்படுகின்றன. கல்லின் மேற்புற வளைவுப்பகுதியில் " சக்கரவர்த்தி வி நாயகர் " என்னும் தலைப்பு உள்ளது. தலைப்பில் இருக்கும் "நாயகர்"என்னும் பகுதி, வளைவை அடுத்துக்கீழே எழுதப்பட்டுள்ள முதல் வரியில் அமைகின்றது. இதனைத்தொடர்ந்து அமைந்துள்ள எட்டு வரிகளில், 1911-ஆம் ஆண்டு டிசம்பர் 12-ஆம் தேதியன்று (இவ்வூர்) இந்துக்கள், நமது சக்கரவர்த்தி ஐந்தாம் ஜார்ஜ் அவர்களின் முடிசூட்டு விழாவின் நினைவாக இந்த விநாயகரை நிறுவியுள்ளனர் என்னும் செய்தி எழுதப்பட்டுள்ளது.



தமிழில் பொறிக்கப்பட்டிருக்கும் இரண்டு பக்கங்களில் ஒன்றில்,



"கலியுகாதி 5013 வரு. காத்திகை மீ 27 தேதி
சார்சு சக்கரவர்த்திக்கி டில்"
என்றும், மற்றொரு பக்கத்தில்,





“பிசேகஞ்செய்த ஞாபகத்திற்கு இந்தவூர்
இந்துக்கள் செய்து வைத்த பிரஸ்டை
சக்கிரவர்த்தி வினாயகன்”

என்றும் எழுதப்பட்டுள்ளது. அதாவது, கலியுக ஆண்டு 5013-இல் கார்த்திகை மாதம், (இங்கிலாந்து) ஜர்ர்ஜ் சக்கரவர்த்தியவர்களின் முடிசூட்டு விழா (பட்டாபிஷேகம்) தில்லியில் நடைபெற்றதன் நினைவாக அலங்கியம் ஊர் இந்துக்கள் விநாயகரை எழுந்தருளிவித்து (பிரதிஷ்டை செய்து)) அந்த விநாயகருக்கு ”சக்கரவர்த்தி விநாயகன்” என்று பெயர் சூட்டியிருந்திருக்கிறார்கள்.

ஆங்கிலமொழியில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டின் பாடத்தின்படி, விநாயகரைப் பிரதிஷ்டை செய்தது டிசம்பர், 12, 1911. இந்தத் தேதியோடு, கல்வெட்டின் தமிழ்ப்பகுதியில் குறிப்பிடப்பெறும் கலியுக ஆண்டு கார்த்திகை இருபத்தேழாம் தேதி சரியாகப் பொருந்திவருகிறது. ஆங்கிலப்பகுதியில், முடிசூட்டு விழா எங்கு நடைபெற்றது என்னும் குறிப்பு இல்லை. ஆனால், தமிழ்ப்பகுதியில், விழா டில்லியில் நடைபெற்றது என்னும் குறிப்பு காணப்படுகிறது. “ஜார்ஜ்” என்னும் வடமொழி உச்சரிப்பு “ சார்சு “ என்றும், “பிரதிஷ்டை” என்னும் வடமொழி உச்சரிப்பு “ பிரஸ்டை “ என்றும், ” பட்டாபிஷேகம்” என்னும் வடமொழி உச்சரிப்பு “ (பட்டா)பிசேகம் “ என்றும் எழுதப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

ஆங்கிலப்பகுதி “ கடவுள் மன்னரைக் காப்பாற்றுவாராக “ என்னும் பொருள் அமைந்த ஆங்கிலத்தொடருடன் முடிகின்றது.

மற்ற கடவுளர்க்கும் பிள்ளையார் என மக்களால் வழங்கப்படும் விநாயகருக்கும் ஒரு வேறுபாடு உள்ளது. மக்கள் நடுவில் எளிமையாக எங்கு வேண்டுமென்றாலும், கூரையே இல்லாமலும் கோவில் எழுப்ப இடங்கொடுக்கும் கடவுள் விநாயகர்தான். அதே போல், மக்கள் அவரவர்க்குத் தோன்றியவாறு புதுமையான பெயரிட்டு அழைக்கும் உரிமையும் பிள்ளையார்மேல்தான் உண்டு. விநாயக சதுர்த்தியின் போது, வெவ்வேறு வடிவக்காட்சிகளில் பிள்ளையார் சிலைகளை அமைப்பதைப்பார்க்கிறோம். அதேபோல், பல்வேறு பெயர்களையும் பிள்ளையாருக்குச் சூட்டிமகிழ்கிறார்கள். மேலே கண்ட அலங்கியம் விநாயகர் “சக்கரவர்த்தி விநாயகர்” என்னும் பெயரில் இங்கிலாந்துச்சக்கரவர்த்தி ஜார்ஜ் மன்னரை நினைவூட்டுகிறார்.

இனி, கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டு விழா பற்றிச் சில செய்திகளைக்குறிப்பிட வேண்டியுள்ளது. ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், லண்டனில் “வெஸ்ட் மினிஸ்டர் அப்பே” என்னும் வளாகத்தில் 1911-ஆம் ஆண்டு, ஜூன் 22-ஆம் தேதி முடிசூட்டிக்கொண்டார். இந்தியா போன்ற சில நாடுகள் இங்கிலாந்துச் சக்கரவர்த்தியின் ஆளுகைக்கீழ் இருந்தமையால், இந்தியச் சக்கரவர்த்தி என்னும் நிலையை வெளிப்படுத்திக்கொள்ள அவர் தில்லி அரசர்கள் நடத்திவந்த “தர்பார்” மரபுப்படி, தில்லியில் மீண்டும் முடி சூட்டும் விழாவினை நடத்த விருப்பங்கொண்டு, விழா தில்லியில் ”காரனேஷன்”பூங்காவில் நடத்தப்பட்டது. விழாவில் மேரி அரசியாரும் கலந்துகொண்டார். இதில் சிறப்பு என்னவெனில், இங்கிலாந்தில் சூடிய முடியை இங்கிலாந்தைவிட்டு வெளியில் கொண்டு செல்ல உரிமையில்லை என்னும் காரணத்தால் இந்திய முடிசூட்டு விழாவுக்குத் தனிப்பட ஒரு முடி ( IMPERIAL CROWN OF INDIA ) செய்யப்பட்டது.

ஆனால், அது இந்தியாவில் செய்யப்படவில்லை. இங்கிலாந்து அரச மரபினர்க்கென அணிகலன்கள் செய்து தரும் ” GARRARDS & CO. ” என்னும் வணிக நிறுவனம் செய்து தந்தது. விழா 1911-ஆம் ஆண்டு டிசம்பர் 12-ஆம் தேதியன்று நடைபெற்றது. மரபுப்படி, இந்திய சமஸ்தான மன்னர்கள் தர்பாரில் மன்னர்முன் நின்று வணங்கிச்சென்றனர். இவ்வாறு இங்கிலாந்துக்கு வெளியில் நடைபெற்ற விழாவில் நேரில் அரசர்,அரசியார் கலந்துகொண்ட விழா இது ஒன்றே எனக்கூறப்படுகிறது.

நாட்டு விடுதலை  பற்றிய விழிப்புணர்வு ஏற்படுவதற்கு முன்பிருந்த காலகட்டமாகையால். ராஜமரியாதையைக்காட்டுவது வழக்கத்தில் இருந்திருக்கவேண்டும். இது போன்ற நினைவுச்சின்னங்கள் நாட்டில் ஆங்காங்கே அமைக்கப்பட்டுள்ளன எனத்தெரிகிறது. சென்னையில் உள்ள கல்வெட்டு அறிஞரான சு.இராசகோபால் அவர்கள் கொடுத்த சில செய்திகளாவன:

மதுரை அருகே திருவாதவூரில், மன்னர் ஐந்தாம் ஜார்ஜ் மற்றும் அரசியார் மேரி இருவரின் முடிசூட்டு விழாவை முன்னிட்டு விளக்குத்தூண் ஒன்று நிறுவப்பட்டுள்ளது.




60/2003 திருவாதவூர் பக்கம்.

நகரத்தார் ஊரான கோட்டையூரில், ஒரு வீட்டு நுழைவாயில் வளைவுகளில் இங்கிலாந்து அரசர் மற்றும் அரசியரின் சுதை உருவங்களும், வீட்டினுள் வண்ணப்படங்களும் காணப்படுகின்றன.

புதுமையான பெயரில் பிள்ளையார் கோவில் எழுப்பப்படுவது உண்டு. அவ்வகையில், சென்னையில் உள்ள அறுபடை முருகன் கோவிலின் நடுவில், அமெரிக்கா வாழ் நகரத்தார் எழுப்பிய " நியூயார்க் பிள்ளையார் " கோவில் அமைந்துள்ளது.

மேற்படி அலங்கியம் விநாயகர் கோவில் கல்வெட்டு, தமிழகத்தொல்லியல் துறையினரால் படிக்கப்பட்டு 2010-ஆம் ஆண்டு வெளியிடப்பெற்ற "திருப்பூர் மாவட்டக்கல்வெட்டுகள்" நூலில் தொகுக்கப்பட்டிருப்பினும், அலங்கியம் ஊர் மக்கள் தம் ஊரில் இருக்கும் கல்வெட்டினை அறியாதிருக்கலாம். அறிந்திருப்பவர்களிலும் பலருக்கு அதன் வரலாற்றுப்பின்னணியும், செய்தியும் தெரியாதிருக்கலாம். "பண்டைய அரசியல், வரலாறு, சமயம், பண்பாடு ஆகியவற்றை அறிய முதன்மைச்சான்றுகளாக அமையும் கல்வெட்டுகளின்" செய்திகள் மக்களை எட்டவேண்டும் என்பதற்காகவே இக்கல்வெட்டுச்செய்தி வெளியிடப்பெறுகிறது.

---



திரு. து. சுந்தரம்
கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.
doraisundaram18@gmail.com
**அலை பேசி** : 9444939156

---

5.

# கொங்கவிடங்கீசுவரர் கோவில்

-- து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.

உடுமலை அருகே ஒரு சிற்றூர். அங்கே ஒரு சிவன் கோவில். ஏறத்தாழ இன்றைக்கு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது என்பது உறுதி. ஏனெனில், கி.பி. 1221-ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு இக்கோவிலில் காணப்படுகிறது. கொங்கு நாட்டை ஆண்ட கொங்குச் சோழ அரசன் வீரராசேந்திரன், கொங்கு நாட்டில் வடகொங்கு, தென்கொங்கு ஆகிய இரு பகுதிகளையும் ஆண்ட அரசன் ஆவான். அவனது ஆட்சிக்காலம் கி.பி. 1207 முதல் கி.பி. 1256 வரை என வரலாற்று அறிஞர்கள் வரையறுத்துள்ளனர். இவன் காலத்துக் கி.பி.1221-ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு இக்கோவிலில் இருப்பதனால், இக்கோவில் எண்ணூறு ஆண்டுப்பழமையானது என்பதை உறுதி செய்ய இயலுகிறது.



## <u>கொங்கவிடங்கீசுவரர் கோவில்:</u>

முற்றிலும் கற்களால் ஆன கற்றளியாகக் கட்டப்பட்ட இக்கோவில், சோழர் காலத்துப்பாணியில் அமைந்த கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய இரு பகுதிகளைக் கொண்டுள்ளது. கருவறையில் குடி கொண்டுள்ள இறைவர் லிங்கத்திருமேனியர். இந்த லிங்கத்திருமேனிக்கு ஒரு சிறப்புண்டு. தானாய்த் தோன்றிய இறைத்திருமேனி. உளி கொண்டு செதுக்கப்படாத லிங்கத்திருமேனியை **"விடங்கர்"** என அழைப்பது மரபு. அந்த மரபில் இவ் இறைவரும் " **விடங்கீசுவரர்** " என்ற பெயரால் அழைக்கப்படுகிறார். கொங்கு நாட்டில் அமையப்பெற்ற சிவன் கோவில்களில் " **கொங்கு** " என்னும் நிலத்தின் பெயரைத் தாங்கியுள்ள கோவிலைக்காண்பது அரிது. இந்தக் கோவில் அத்தகைய அருமையை உடையது. இறைவர், இந்த அருமையைத் தாங்கி, " **கொங்கவிடங்கீசுவரர்** " என்று அழைக்கப்படுகிறார்.



**<u>பழங்காலத்தில் கோவில்களின் நிலை:</u>**

பழங்காலத்தில் கோவில்களின் நிலை என்ன, சிறப்பும் பயன்பாடும் என்ன என்பதைச் சற்றுக் காண்போம். கோவில்கள் அரசர்களால் கட்டுவிக்கப்பட்டன. அரசர்கள், மக்களிடமிருந்து பெற்ற வரி வருமானங்களையும், போர் மூலம் கவர்ந்த பொன்னையும் பொருளையும் கோவில்களைப் பேணுவதில் செலவிட்டனர். அரசர்கள், கோவிலுக்கு நிலங்களைத் தானமாக அளித்ததோடல்லாமல் அந்நிலங்களின் வரிகளை நீக்கி னர். இவை இறையிலி நிலங்கள் எனப்பட்டன. அரசியரும் தனிப்பட்ட முறையில் கோவில்கள் எழுப்பினர்; கொடைகள் வழங்கினர்; திருப்பணிகள் செய்தனர்.

குடிமக்களும் கோவில்களுக்குக் கொடைகள் பல அளித்தனர். குடிமக்களில் பலவகைப் பிரிவினரும் இதில் அடங்குவர். வேளாண்குடிகள், சிறு வியாபாரிகள், பெரு வணிகர்கள், தேவரடியார்கள் போன்ற பலரும் கோவில் பணிகளுக்காகக் கொடைகள் வழங்கியுள்ளனர். அரசு அதிகாரிகளும் பெருமளவில் தானங்கள் வழங்கியுள்ளனர். கோவில்களில் நாள்தோறும் நடைபெறும் வழிபாட்டுக்காகவும், சந்தியாதீபம் எனப்படும் விளக்கெரிக்கவும் மற்றும் பல்வேறு பணிகளுக்காகவும் இக்கொடைகள் பயன்பட்டன.

வழக்கமாக ஒவ்வொரு கோவிலும் கருவறை, அர்த்தமண்டபம் என்னும் நடுமண்டபம், முன்மண்டபம் இவற்றைக் கொண்டிருக்கும். கோவிலைச் சுற்றிலும் ஒரு திருச்சுற்றும் (பிராகாரம்) மதிலும் இருக்கும். பெரிய கோவில்களில் ஒன்றுக்கு மேற்பட்ட திருச்சுற்றுகள் அமைவதுண்டு. இத்திருச்சுற்றுகளில் அரசர், அரசரைச் சார்ந்தோர் முதலியோர் எடுப்பித்த சிறிய கோவில்கள் இடம்பெறும். பெரிய கோவில்களை நிருவாகம் செய்யத் தனிக்குழுவினர் இருந்தனர். ஸ்ரீ காரியம் செய்வார், கோவில் தானத்தார், ஊர்ச்சபையினர், மாகேசுவரர் ஆகியோர் இக்குழுவில் இடம்பெற்றிருந்தனர். வழிபாட்டுப்பொறுப்பில் சிவப்பிராமணர்களும் கோவிலின் பிற பணிகளுக்குப் பணியாளர்களும் இருந்தனர். கோவிலுக்கென்று தனியே கருவூலம் இருந்தது. இது ஸ்ரீ பண்டாரம் என்று அழைக்கப்பட்டது. கோவிலின் வரவு செலவு கணக்குகள் கோவில் கணக்கர் பொறுப்பில் இருந்தன.

கோவிலின் பல்வேறு பணிகளுக்குப் பணியாளர்கள் இருந்தனர் என்று மேலே குறிப்பிட்டோம். அப்பணியாளர்கள் திருஅலகிடுதல், திருமெழுக்கிடுதல், பூத்தொடுத்தல், மடைப்பள்ளிப்பணி ஆகிய பணிகளைச் செய்தனர். அலகிடுதல்

என்பது துடைப்பம் கொண்டு கோவிலைத் தூய்மை செய்தலைக்குறிக்கும். மெழுகிடுதல் என்பது சாணத்தால் தரையை மெழுகித் தூய்மை செய்தலைக்குறிக்கும். இவ்வகைப்பணிகளுக்கும் பிற பணிகளுக்கும் ஆண்கள், பெண்கள் ஆகிய இருபாலரும் பணியமர்த்தப்பட்டிருப்பினும், குறிப்பிட்ட பணிகளுக்குத் தேவரடியார் என்று அழைக்கப்பட்ட பெண்கள் இருந்தனர். அலகிடுதல், மெழுக்கிடுதல், பூத்தொடுத்தல் ஆகியவை தவிர தேவாரம், திருவாசகம் ஓதுதல்(திருப்பதியம் பாடுதல்), நடனம் ஆடுதல், அம்மனை எழுந்தருளுவிக்கும்போது அம்மனுக்குக் கவரி வீசுதல் ஆகியவற்றை இந்தத் தேவரடியார்கள் செய்தனர். இவர்கள் பதியிலார், தளிச்சேரிப்பெண்டுகள் என்று அழைக்கப்பட்டனர். ஏறக்குறைய எல்லாக்கோயில்களிலுமே தேவரடியார்கள் தொண்டு செய்து வந்தனர் எனத் தெரிகின்றது.

கோயில்களில் நாள்தோறும் ஆறு சந்திப் பூசை வழிபாடு நிகழ்ந்தது. விழாக்கள் பல கொண்டாடப்பட்டன. ஒவ்வொரு மாதத்திலும் மாத விழாக்களும், ஆண்டுக்கொருமுறை பெருவிழாவும் (பிரம்மோத்சவம்) நடைபெற்றன. சிவராத்திரி, சங்கராந்தி, உத்தராயணம், மற்றும் கிரகணங்கள் நிகழ்ந்த நாள்கள் ஆகிய சிறப்பு நாள்களிலும் விழாக்கள் எடுக்கப்பட்டன. மன்னர்கள் பிறந்த நட்சத்திரங்களிலும் விழா எடுக்கப்பட்டது. விழாக்களின்போது தேவரடியார்கள் சாந்திக்கூத்து, ஆரியக்கூத்து, சாக்கைக்கூத்து ஆகிய கூத்துகள் நிகழ்த்தினர். (கூத்து நிகழ்த்தும் ஆண்களும் இருந்தனர்.) சமய நூல்கள் கோயில்களில் படிக்கப்பட்டன. அரசர்களும் கோயில் விழாக்களை நேரில் கண்டு களித்ததாகக் கல்வெட்டுச் செய்திகள் கூறுகின்றன.

கோயில்கள் இறைவழிபாட்டு இடங்களாக மட்டுமன்றி சமுதாயப்பணிகள் நடைபெற்ற இடங்களாகவும், பொருளாதார மையங்களாகவும் விளங்கின. இன்னலுற்ற மக்களுக்குப் புகலிடங்களாகவும் பயன்பட்டன. வறட்சியிலும், பஞ்சத்திலும் குடிமக்களுக்குக் கோயில்களிடமிருந்து பொருளுதவி கிடைத்தது. பஞ்சம் தீர்ந்தபிறகு கடன் திருப்பித் தரப்பட்டது. கோயில்களில் நந்தா விளக்கு, சந்தியா தீபம் ஆகிய நிவந்தங்களுக்காக விடப்படும் ஆடுகள் (ஒவ்வொரு விளக்குக்கும் தொண்ணூறு ஆடுகள் என்ற கணக்கில்) இடையர்களுக்குத் தரப்பட்டு அவர்களின் வாழ்வாதாரங்களாக அமைந்தன. விளக்குகளுக்கான எண்ணையைக் கோயிலுக்கு வழங்கவேண்டியது அவர்கள் பொறுப்பு.

மக்கள் பலர் தம் எண்ணங்கள் நிறைவேறவேண்டும் என்று இறைவன் முன்பு வேண்டுதல் (பிரார்த்தனை) செய்துகொண்டு காணிக்கை செலுத்திக்கொள்ளும்

வழக்கம் பதின்மூன்றாம் நூற்றண்டிலேயே காணப்படுகிறது. மக்களில் ஒரு சிலர், கோயில் பணிகளுக்காகத் தம்மையே கோயிலுக்கு அடிமையாக விற்றுக்கொண்டமையும் கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படுகிறது.

**கொங்கவிடங்கீசுவரர் கோவில் கல்வெட்டுகள்:**

கோயில்களைப்பற்றிய சிறப்புகளையும் செயல்பாடுகளையும் மேலே விளக்கமாக உரைத்ததன் நோக்கம் இச்செயல்பாடுகளில் ஒரு சிலவேனும் கொங்கவிடங்கீசுவரர் கோயிலிலும் நிகழ்ந்திருக்கவேண்டும் என்று நம் எண்ணத்தில் பதியவேண்டும் என்பதுதான். ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகளாக எத்துணை ஆயிரம் மக்கள் இக்கோயிலினுள்ளே நடமாடி இறைவனை வழிபட்டிருப்பர். வழிபாடும் விழாவுமாக எத்துணை உயிர்ப்புடன் கோயில் விளங்கியிருக்கும். ஆனால், அந்த உயிர்ப்பு காணாமல் ஒழிந்து போய் கோயில் தற்போது சிதைந்து அதன் சீர்மை இழந்து, கருவறையும் அர்த்தமண்டபமும் மட்டிலுமே இடிந்துவிட்ட கட்டுமானங்களாய் எஞ்சியிருப்பதைக்காண்போர் நெஞ்சம் கலக்கமுறும். திருச்சுற்று இல்லை; சுற்று மதில் இல்லை; திருச்சுற்றில் எழுந்தருளப்பெற்ற சிறு கோவில்கள் (சன்னதிகள்) இல்லை. வெற்றுப் பாழும் இடிந்த கூரையும் ஆங்காங்கே எறிந்து கிடக்கும் கட்டுமானக் கற்களும் அழிவுக் கோலம் காட்டுகின்றன. கல்வெட்டறிஞர் குடந்தை சேதுராமன் என்பார் கூறுவதை நோக்குங்கள்:

> ***"நான் ஒரு பழமைப்பித்தன். அருமையான ஆலயங்களைக் கண்டால் ஆனந்தக் கண்ணீர் விடுவேன். இடிந்த கோயில்களைக் கண்டால் நானும் இடிந்து போய்விடுவேன். பாழடைந்து இடிந்து கிடக்கும் ஆலயங்களுக்குச் சென்று அப்பிரகாரங்களில் சிறிதாவது படுத்துப்புரளுவதில் ஒரு ஆனந்தம்."***

இத்தகைய அழிவின் விளிம்பிலும் கோயிலின் கருவறைச் சுவர்கள் மற்றும் அர்த்தமண்டபச் சுவர்கள் ஆகியன கல்வெட்டுகளின் கருவூலங்களாய்த் திகழ்கின்றன. தமிழகத்தின் அரசியல் வரலாற்றையும், சமய வரலாற்றையும், சமுதாய வரலாற்றையும் அறிய உதவும் மூலப்பொருள்களுள் ஒன்றாய் விளங்குவன கல்வெட்டுகளே. அத்தகு கல்வெட்டுகள் பத்து இங்குள்ளன. முதல் கல்வெட்டு, ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து அஞ்சாதகண்ட பிரமாராயன் என்பவர் இக்கோயிலில் சுப்பிரமணியப் பிள்ளையாரை எழுந்தருளிவித்தார் என்னும் செய்தியைக் கூறுகிறது. பிரமாராயன் (பிரமமாராயன் எனவும் கூறப்படுவர்) என்பது அரசு அதிகாரிகளில் மிக உயர்ந்த பதவியைக் குறிக்கும் சொல். படைத்தளபதியாகவும் மந்திரியாகவும் பொறுப்புடையவர். இவர் வடுகக்கொத்து

என்னும் படைப்பிரிவில் ஒரு படைத்தளபதியாக இருந்தார் என்று கல்வெட்டு கூறுகிறது. இக்கோயில் தென்கொங்கு நாட்டில் உடுமலை அருகில் கடத்தூரில் அமைந்துள்ளது; ஜெயங்கொண்ட சோழ மண்டலம் என்பது தொண்டை நாடு. முதன்மைச் சோழரின் (தஞ்சைச் சோழரின்) படைத்தளபதி ஒருவர் இக்கோயிலுக்குச் செய்திருக்கிறாரென்றால் கோயிலின் சிறப்பான நிலையை உணரலாம்.



அடுத்த கல்வெட்டு, தாராபுரத்துக் கீரனூர் ஊரைச்சேர்ந்த அரசு அதிகாரிகள் இருவர் கீரனூர் வாகீசுவரமுடையார் சிவன் கோயிலுக்கு நிலம் கொடையாக அளித்ததைக் குறிப்பிடுகிறது. கீரனூர் கோயிலுக்கு அளித்த கொடை கடத்தூர் கோயிலில் காணப்படுவது ஏன் என்னும் கேள்வி எழலாம். கொடையாகக் கொடுத்த நிலம் கடத்தூரில் அமைந்திருந்தது என்பதுதான் செய்தி. கோயிலுக்கு அளித்த நிவந்தங்களை அக்காலத்தே முறையாக ஆவணப்படுத்தியமைக்கு இக்கல்வெட்டும் ஒரு சான்று. கடத்தூர் கொங்கு நாட்டின் ஒரு பிரிவான கரைவழி நாட்டில்



அமைந்திருந்தது எனக் கல்வெட்டு கூறுகிறது. மூன்றாம் கல்வெட்டு, கொங்கவிடங்கீசுவரர் கோயிலுக்கு சந்தியா தீபம் எரிப்பதற்காகக் காசு இரண்டு அச்சு ஒருவர் கொடையாக அளித்ததைக் கூறுகிறது. காசு கோயில் பண்டாரத்தில் ஒடுக்கப்பட்டது. அக்காசினைக்கொண்டு காரைத்தொழு என்னும் ஊரில் நிலம் வாங்கப்பட்டு அந்நிலதின் விளைச்சலில் கிடைக்கும் வருவாயைக் கொண்டு ஆண்டு முழுதும் சந்தியா தீபம் எரிக்கப்பட்டது. கோயிலுக்கென்று தனியே கருவூலம் (பண்டாரம்) இருந்ததைக் கல்வெட்டு மூலம் அறிகிறோம். அடுத்த கல்வெட்டிலும் இதுபோலவே சந்தியா தீபத்துக்காகக் காசு கொடுக்கப்பட்டு நிலம் வாங்கப்பட்ட செய்தி கூறப்படுகிறது. ஐந்தாவது கல்வெட்டு, சோழமாதேவி ஊரில் நிலம் கொடையாகத் தந்து, கொங்கவிடங்கீசுவரர் கோயிலில் அவிநாசிக்கூத்தரையும் நாச்சியாரையும் எழுந்தருளச்செய்துள்ளனர் என்னும் செய்தியைச் சொல்லுகிறது. கூத்தர் என்பது நடராசரையும், நாச்சியார் என்பது அம்மனையும் குறிப்பதாகும். எனவே, கொங்கவிடங்கர் கோயிலில், கோயில் நடைமுறைகளை நாம் மேலே விவரித்ததற்கிணங்க அம்மன் சன்னதி, முருகன் சன்னதி, நடராசர் சன்னதி ஆகிய சன்னதிகள் எழுப்பப்பட்ட செய்தியினை அறிகிறோம்.

அடுத்து ஆறாம் கல்வெட்டு மிகவும் சிறப்புடைய ஒன்று. மக்கள் பலர் தம் எண்ணங்கள் நிறைவேறவேண்டும் என்று இறைவன் முன்பு வேண்டுதல் (பிரார்த்தனை) செய்துகொண்டு காணிக்கை செலுத்திக்கொள்ளும் வழக்கம் பதின்மூன்றாம் நூற்றாண்டில் இருந்துள்ளதை மேலே குறிப்பிட்டோம். அது போன்ற ஒரு நிகழ்வுக்குச் சான்றாக இக்கல்வெட்டு உள்ளது. கி.பி. 1233-ஆம் ஆண்டுக்குரிய இக்கல்வெட்டு, **அரசன் வீரராசேந்திரனின் கிரகதோஷம் நீங்க வேணும் என்று அரசனின் அதிகாரிகளுள் ஒருவனான அணுத்திரப்பல்லவரையன் என்பான் இறைவர் அமுதுபடிக்கு அமுதுபடிப்புறமாகக் கண்ணாடிப்புத்தூரில் நிலம் கொடையாக வழங்கினான் என்று தெரிவிக்கிறது.** அதனால் அரசன் வீரராசேந்திரனுக்குக் கிரக தோஷம் பிடித்திருந்தது என்பதும் அக்கால மக்கள் சோதிடத்தையும் வான சாத்திரத்தையும் அறிந்திருந்தார்கள் என்பதும் புலப்படும். அடுத்த கல்வெட்டு, "கோட்டையில் சேனாபதிகளில் அவிமானராமப் பல்லவரையன்" என்பான் விரதம் முடித்த வினாயகப் பிள்ளையாருக்கு அமுதுபடிக்காக அரசனின் சரக்கில் (கருவூலத்தில்) பொன் முதலாக வைக்கிறான். இப்பொன்னுக்கு அரசன் நிலம் ஒதுக்கி இந்த நிலத்துக்கு வரிவிலக்கும் அளிக்கிறான். இந்த நிலத்திலிருந்து கிடைக்கும் வருவாய் பிள்ளையார் கோயில் வழிபாட்டுக்குச் செலவிடப்படுகிறது. இந்தக் கல்வெட்டிலும் ஒரு சிறப்பான பகுதி உள்ளது. **"கோட்டையில் தெற்கில் அரசின் கீழ் நம் பேரால் விரதமுடித்த வினாயகப்பிள்ளையாற்கு அமுது படிக்கு"** என்று கல்வெட்டுவரி இருப்பதால் இந்தப்பகுதியில் **"கோட்டை"** ஒன்று அமைந்திருந்தது என்பது அறியப்படுகிறது. தற்பொழுதும்கூட இவ்வூர் மக்கள் ஊரில் ஒரு பகுதியைக் கோட்டை என்று அழைக்கிறார்கள்.

அடுத்துவரும் ஏழாவது கல்வெட்டு சமுதாய வரலாற்றைச் சொல்லும் சிறப்பான கல்வெட்டாகும். தென்கொங்கில் கம்மாளர்களுக்கு அரசன் வழங்கிய சிறப்புரிமைகளை இக்கல்வெட்டு கூறுகிறது. உழவுத்தொழிலை மேற்கொண்ட வெள்ளாளர்களுக்கும், தொழில் வினைக்கலைஞர்களுக்கும் இடையில் சமுதாய வேறுபாடும் பகைமையும் கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் காலகட்டத்திலிருந்து தோற்றம் பெற்றுள்ளதாக தொல்லியல் வரலாறு கூறுகிறது. கம்மாளர்கள் சமுதாயச் சூழ்நிலையில் உரிமைக் குறைபாடுகளைச் (Social disadvantages) சந்தித்தார்கள் எனத்தெரியவருகிறது. உழவருக்கு வேண்டிய தொழிற்கருவிகளைச் செய்து கொடுக்கும் நிலையில் கம்மாளர் இருந்ததால், கம்மாளர் என்போர் உழவர்களின் பணிமகன்களே என்று உழவர் எண்ணித் தம் மேலாதிக்கத்தைக் காட்டியிருக்கவேண்டும் எனலாம். வெள்ளாளர்களுக்கிருந்த உரிமைகள்

கம்மாளர்களுக்கு இருந்ததில்லை. அவர்கள் செருப்பணிந்து வெளியே செல்ல முடியாது. தங்கள் வீடுகளுக்குச் சாந்து (காரை) இட்டுக்கொள்ள இயலாது. தங்கள் வீடுகளில் நடைபெறும் நன்மை தீமைகளுக்கு இரட்டைச் சங்கு ஊதுவதற்கில்லை. பேரிகை (drums) என்னும் இசைக்கருவி கொட்டுவிக்க முடியாது. தம் வீடுகளுக்கு இரண்டு வாசல்கள் அமைத்துக்கொள்ள முடியாது. இவ்வகையான ஏற்றத் தாழ்வு உரிமைக்குறைகளைக் களைய கம்மாளர்களின் முறையீட்டின்மேல் அரசனுடைய சிறப்பு ஆணையால்தான் முடிந்தது. அத்தகைய சிறப்புரிமைகளைக் கம்மாளர்க்கு அரசன் வழங்கிய செய்தியை இக்கல்வெட்டு கூறுகிறது.

மிகுதியுள்ள இரண்டு கல்வெட்டுகளில் ஒன்று, திருமடை வளாகத்தில் இருக்கும் தபசி சுந்தர நன்னெறி காட்டினான் என்பவர் கொங்கவிடங்கர் கோயிலுக்கு நந்தாவிளக்கு ஒன்றுக்காகப் பதினாறு காசு கொடை அளித்துள்ளான் என்றும், மற்றொன்று, கடத்தூரிலிருந்த மன்றாடிகளில் காவன் சோழன் என்பான் இறைவற்கு மகுடம் சாத்தினான் என்றும் கூறுகின்றன. திருமடை வளாகம் என்பது கோயிலைச் சுற்றியிருக்கும் வசிப்பிடத்தையும், மன்றாடி என்பது கால்நடை வளர்ப்போரையும், தபசி என்பது துறவிகளான சிவனடியார்களையும் குறிப்பன.

இவ்வாறு, அரிய வரலாற்றுச் செய்திகளைத் தம்முள் கொண்டிருக்கும் கல்வெட்டுகள் இன்றும் நல்ல நிலையில் சிதைந்து போகாமல் படிக்கும் அளவுக்கு உள்ளன என்பது பெரிய பேறு. ஆனால், அழிவைத் தொட்டுக் கொண்டிருக்கும் கட்டுமானங்கள் சிதைந்து விழத்தொடங்குமானால் அரிய கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருக்கும் கற்கள் ஒவ்வொன்றாகக் காணாமல் போகும் அச்சமான சூழ்நிலை உள்ளது. மீண்டும் கல்வெட்டறிஞர் குடந்தை சேதுராமன் அவர்கள் கூறுவதை இங்கே தந்துள்ளேன்:

> ***" நான் ஒரு கல்வெட்டுப் பித்தன். கல்வெட்டுகளைப் படிக்கும்போதெல்லாம் என்னை மறந்து பல நூற்றாண்டுகளுக்குப் பின் அம்மன்னர்கள் வாழ்ந்த காலத்திற்கே சென்றுவிடுவேன். "***

கொங்கவிடங்கீசுவரர் கோவிலும் அதன் கல்வெட்டுகளும் நம்மைக் கி.பி. 13-ஆம் நூற்றாண்டுக்கே அழைத்துச் சென்றாலும் கோவில் அதன் உயிர்ப்பு இன்றிப் பாழ்பட்டு நிற்பதைக் காண்கையில் நாமும் இடிந்து போகாமல் கோயில் அதன் பழைய கட்டுமானத்துக்கு மீட்சி பெற என்ன செய்யலாம் என்பதில் எண்ணம், செயல் இரண்டினாலும் முயலவேண்டும். கோயில்களைப்பேணும் அரசுத்துறை, தொல்லியல்

துறை, தொண்டு நிறுவனங்கள் மற்றும் மக்கள் ஆகியோர் ஒன்றிணைந்து ஆவன செய்யவேண்டும் என்பதில் மாற்றுக் கருத்து இருக்கமுடியாது.

குறிப்பு: REACH FOUNDATION , சென்னைக்கு (ஆகஸ்டு,2014-இல்) இக்கட்டுரையை அனுப்பிவைத்து, கோயிலுக்குப் புத்துயிர் அளிக்க எதேனும் செய்ய இயலுமா எனக்கேட்டிருக்கிறேன்.

**துணை நின்ற நூல்கள்:**


1. கோயம்புத்தூர் மாவட்டக் கல்வெட்டுகள் - தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.
2. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் - டாக்டர் கே.கே.பிள்ளை.
3. தமிழக கலைகளும் கல்வெட்டுகளும் - டாக்டர் மா. இராசமாணிக்கனார்.


---




திரு. து. சுந்தரம்

கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.

doraisundaram18@gmail.com

அலை பேசி : 9444939156


---

## 6.

# சோழர் ஆட்சியில் தென்னிந்தியா: முனைவர் எ.சுப்பராயலு அவர்களின் சொற்பொழிவு

*கலை மற்றும் பண்பாட்டு மரபுக்கான இந்திய தேசிய அறக்கட்டளையின் (Indian National Trust for Arts and Cultural Heritage) சார்பில் கோவை அன்னலட்சுமி ஓட்டல் அரங்கில் தொல்லியல் மற்றும் கல்வெட்டியல் அறிஞர் முனைவர் எ.சுப்பராயலு அவர்கள் 11.09.2015 அன்று நிகழ்த்திய சொற்பொழிவின் உரை வடிவத்தை இங்கே பகிர்ந்துகொள்கிறேன்.*
*-- து. சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.*

---




"சோழர் ஆட்சியில் தென்னிந்தியா" என்னும் நூலின் தலைப்பையே இங்கு பேசுவதற்கும் தந்துள்ளார்கள். இந்தத் தலைப்பு பெரியதொரு தலைப்பு; விரிவாகப் பேசவேண்டியதொன்று. அது இயலாது என்பதால், சோழர் ஆட்சியில் மக்கள் பண்பாடு, கலை, நிருவாகம் ஆகியவற்றில் ஏற்பட்ட மாற்றங்கள் குறித்தும், தென்கிழக்காசிய நாடுகளுக்கும் சோழருக்கும் இடையிலான தொடர்பு குறித்தும் இங்கே காணவிருக்கிறோம்.

**சங்கச்சோழர்கள்:**

தென்னிந்திய வரலாற்றில்-குறிப்பாகத் தமிழக வரலாற்றில்- சோழர் பங்கு பெரிது. சங்ககாலச் சோழரைப்பற்றி நம் அனைவர்க்கும் நன்கு தெரியும். புகழ்மிக்க கரிகால் வளவனைத் தெரியாதார் இரார். பின்னால் வந்த இடைக்காலச் சோழர்கள், சங்ககாலத்துச் சோழர்களைத் தங்கள் முன்னோர் எனச் சொல்லிக்கொள்கிறார்கள். அதேபோல, சங்ககாலச் சோழரின் வழிவந்தவர்கள் தமிழகத்திலிருந்து இடம் பெயர்ந்து வடக்கே சென்று இராயலசீமா பகுதியை ஆட்சிசெய்தார்கள் என்றும் அவர்களுடைய நாடு ரேணாடு என்னும் பெயர்கொண்டது என்றும் வரலாற்றுக் கருத்து உண்டு. ரேணாடு, ரேணாண்டு என்றும் வழங்கியது. கி.பி. 7-8 ஆம் நூற்றாண்டில் இவர்களது செப்பேடுகளில் முதன் முதலாகச் சங்ககாலக் கரிகாலன்

பற்றிய குறிப்பு வருகின்றது. அதில் காவிரியின் வெள்ளப்பெருக்கைக் கட்டுப்படுத்த கரிகாலன் காவிரியின் கரையை உயர்த்தினான் என்னும் குறிப்பு காணப்படுகிறது. இச்செப்பேடுகள் தெலுங்கு மொழியில் அமைந்தவை.

**இடைக்காலச்சோழர் - சோழர் கலைப்பாணி:**

சங்ககாலச் சோழர்களை அடுத்து இரண்டாவது சோழர் ஆட்சியைத் தொடங்கியவன் விசயாலயச்சோழன் ஆவான். காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு. அவனுடைய ஆட்சிக்காலம் கி.பி. 850-870. அவனது ஆட்சியில் தொடங்கிய சோழர் ஆட்சி கி.பி.1250 வரை ஏறத்தாழ நான்கு நூற்றாண்டுகள் தொடர்ந்த வரலாறு. சோழர் ஆட்சியில் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. பண்பாடு, கலை, இலக்கியம், நிருவாகம் ஆகியவற்றில் பெரும் மாற்றங்கள். சோழர் விட்டுச் சென்றது என்ன என்றொரு கேள்வி எழுந்தால், விடை சோழர்களுக்கே உரிய கோயில்கட்டிடக்கலை, சிற்பக்கலை என்பதாகும். சோழர்கலைப்பாணி என்பது அவர்களின் அரிய அடையாளம். குறிப்பாக, சோழர்களின் செப்புத்திருமேனிகள் அவர்களது கலைப்பாணியைப் பறைசாற்றும். உலகின் பல நாடுகளுக்கும் அவை சென்றுள்ளன. திருட்டு வழியாகச் சென்றவை மிகுதி.

1992-ஆம் ஆண்டு ஜப்பான் நாட்டில் டோக்கியோ நகரில் நடைபெற்ற கண்காட்சி ஒன்றில் அமெரிக்கச் செல்வரான ராக்கபெல்லர் தம்முடைய சேர்ப்பாகக் (collection) காட்சியில் வெண்கலத்தால் ஆன புத்தர் படிமம் ஒன்றையும் வைத்திருந்தார். இப்படிமம், நாகப்பட்டினத்தைச் சேர்ந்தது; கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்னும் குறிப்பும் இருந்தது. படிமத்தின் பதுமப்பீடத்தில் தமிழ் எழுத்துகள் காணப்படவே, அதனை ஒளிப்படம் எடுத்து ஆய்வு செய்ததில் அது கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும் இராசேந்திரப்பெரும்பள்ளியைச் சேர்ந்த அக்கசாலைப்பெரும்பள்ளி கோயிலுக்கு திருவுத்சவத்துக்காகச் செய்த அக்கசாலை ஆழ்வார் என்னும் பெயரமைந்த திருமேனி என்றும் தெரிய வந்தது. தொல்லியல் ஆவணங்களை ( சிலைகள், செப்பேடுகள் போன்றவை ) நம்முடைய அருங்காட்சியகங்களை விட வெளி நாடுகளில் நல்லமுறையில் வைத்துப் பாதுகாக்கிறார்கள். தமிழ்நாட்டில் நம் அரசும், அருங்காட்சியகங்களும் தொல்லியல் ஆவணங்களைப் பாதுகாப்பதில் கொண்டுள்ள ஈடுபாடு குறைவு.

முதலாம் இராசேந்திரனின் கரந்தைச்செப்பேட்டை (இருபத்திரண்டு ஏடுகளைக்கொண்டது) தமிழ் நாட்டு அருங்காட்சியகத்தில் கிடங்கில் குப்பையோடு குப்பையாகப் போட்டுவைத்திருக்கிறாகள். பழம்பொருளுக்கும் நல்லபல ஆவணங்களுக்கும் நாம் கொடுக்கும் மதிப்பு இதுதான். லெய்டன் செப்பேடு நன்கு

பாதுகாக்கப்பட்டுவருகிறது. காரணம், அது டச்சுக்காரர்கள் மூலம் லெய்டன் சென்றது. லெய்டன் பல்கலை நூலகத்தில் அது பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. அதைப்பார்வையிட விருப்பம் தெரிவித்தபோது, தேர் போன்ற ஒரு வண்டியில் பட்டுத்துணியின் மீது அழகாக வைத்துக் கொண்டுவந்து காண்பித்தனர். இந்த நிலை, இந்திய அருங்காட்சியகங்களுக்கு இல்லாமல் போனது. அவற்றுக்குப் போதிய அரசுப்பண உதவி மற்றும் அரசு ஊழியர் கிடைப்பதில்லை.

**சோழர் கல்வெட்டுகள்:**

இந்தியாவில் ஏறத்தாழ 60,000 கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு தொல்லியல் அலுவலகங்களில் சேர்த்துவைக்கப்பட்டுள்ளன.. அவற்றில் பாதி தென்னிந்தியாவில் தமிழ்நாடு, கருநாடகம், ஆந்திரம் ஆகிய மூன்று மாநிலங்களில் உள்ளன. இவற்றில் பாதி தமிழகத்தில் உள்ளன. இவற்றில் பாதி (15000 கல்வெட்டுகள்) சோழருடையவை என்பது குறிப்பிடத்தக்கது. எனவே, இந்திய அளவில் சோழருடைய கல்வெட்டுகளே மிகுதி. அடுத்து எண்ணிக்கையில் இருப்பவை விஜயநகர அரசர் கல்வெட்டுகளாகும். அவை மூன்று மொழிகளில் அமைந்துள்ளன.

சோழர் கல்வெட்டுகளைப் பல கோணங்களில் ஆராயலாம். முதலில் அவற்றை ஆராய்ந்தவர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்களே. 1940-இல் "The Cholas" என்னும் ஆய்வு நூலை எழுதினார். அப்போதிருந்த ஆய்வு முறை, தற்போதுள்ள ஆய்வு முறைகளினின்றும் வேறானது. அவர், "குடிவழி வரலாறு" என்னும் Dynastic History முறையை நன்றாகச் செய்திருக்கிறார். தற்போது சமூகப்பொருளாதார வரலாற்று முறையில் (Socio Economic History - Statistical Methodology) ஆய்வுகள் செய்யப்படுகின்றன. முடிவுகளும் ஒரு பொதுப்படையான நிலையில் (Generalisations) இருப்பன. ஆராய்ச்சி வளர்ந்துகொண்டே உள்ளது.

கல்வெட்டுகள், பெரும்பாலும் கோயில் சுவர்களில் உள்ளவை, கோயிலுக்கு அளிக்கப்படும் கொடை பற்றியவையே. எல்லாவகைச் சமூகத்தாரும் கொடை அளித்துள்ளார்கள் என்பதால் கோடாமை (bias) இன்றி சமூகப்பொருளாதார வரலாறு அறியப்படாது. கொடைகள், தொடக்கத்தில் பொருளாதாரம் சார்ந்து பணம், தங்கம், கால் நடைகள் ஆகிய வடிவங்களிலேயே கொடுக்கப்பட்டன. போகப்போக நிலத்தை அல்லது நிலவருவாயைக் கொடுப்பது நடைமுறைக்கு வந்தது. பின்னர், நிலம் முழு உரிமையாகக் கொடுக்கப்பட்டது. இதைத் திருநாமக்காணி என்பர். கோயில் இறைவர்தாம் நில உடைமையாளர். கோயில் "டிரஸ்டி"கள் இவ்வகைக் கொடைகளை நிருவாகம் செய்தனர். நிலங்களைப்பற்றி நிறையச் செய்திகள்

கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. நிலத்தின் வகை, விளை திறன் போன்ற ஊர்ப்புறப் பொருளாதாரம் பற்றிய செய்திகள் உள்ளன. நிலங்கள் இருக்கும் ஊர்கள் ஆராயப்பட்டதில், நிலவியல் அடிப்படையில் ஊர்கள் அவற்றின் இருக்கைகள் சேர்ந்தது நாடு என அழைக்கப்பட்டதை அறிகிறோம். கி.பி. 6 முதல் கி.பி. 10 நூற்றாண்டுவரை ஊர் மற்றும் நாடு என்னும் பிரிவுகள் இருந்துள்ளன.

**இராசராசனின் நிலச்சீர்திருத்தங்கள் - நில அளவீடு:**

முதலாம் இராசராசன் இந்த நிலப்பிரிவுகளில் மாற்றத்தை எற்படுத்துகிறான். சில நாடுகளை இணைத்து வளநாடு எனப்பிரிக்கிறான். அதுவரையில், நாடு என்னும் பிரிவிலிருந்த நாட்டு நிலக்கிழார்கள் சேர்ந்த அமைப்பான நாட்டார் என்போரது தன்னாதிக்கம் அல்லது தன்னாட்சி என்பது மேலோங்கியிருந்த நிலை மாறியது. அவர்கள் அரசுக்கு வரி செலுத்தினாலும் அவர்களுக்கென்று உரிமைகள் இருந்தன. வளநாடு உருவானதும் அவர்களது தனி உரிமைகள் குறைந்தன. வளநாட்டில், நீர் வாய்க்கால்களின் இருபுற நிலங்கள் கூறாக்கப்பட்டு இரு புறமும் இரு வளநாடுகள் ஆக்கப்பட்டன. இராசராசனின் ஆட்சிக்காலத்தில்தான் முதன் முதலில் நிலங்கள் அளக்கப்பட்டன. இது நிகழ்ந்தது அவனது 16-ஆம் ஆட்சியாண்டில்; அதாவது கி.பி. 1001-இல். அப்போது சில மாற்றங்களைச் செய்கிறான். சோழ நாட்டின் மையப்பகுதியான காவிரி "டெல்டா" பகுதியில் நிறைய ஊர்களும், பிரமதேயங்களும் உருவாக்கப்பட்டன. பிரமதேயங்கள் என்பவை பிராமண ஊர்களாகும். காவிரி "டெல்டா"வில் 1300 ஊர்கள் இருந்தன; 70 நாடுகள் இருந்தன. 250 ஊர்களில் பிராமணக்குடியிருப்புகள் இருந்தன. எல்லா ஊர்களிலும் கல்வெட்டுகள் இருக்கின்றன.

இந்த ஊர்களில் நிலங்கள் அளக்கப்பட்டன. அளவையில் (Survey) , ஊர்களில் இருந்த மொத்த நிலங்களும் அளக்கப்பட்டுக் குறிக்கப்பட்டன. ஒவ்வொருவருக்கும் எவ்வளவு நிலம் உரிமையாக இருந்தது என்பது கணிக்கப்பட்டது. ஊர் நத்தமும் கணக்கிடப்பட்டது. விளைச்சலை அடிப்படையாக வைத்து ஒரு பூ நிலம், இரு பூ நிலம் என்று வகைப்படுத்தப்பட்டது. நில அளவையில் வேலி, மா, காணி, மாகாணி, முந்திரி என்பவை முக்கியமானவை. ஒரு வேலி நிலம் இன்றைய அளவீட்டில் 6.6 ஏக்கர் அல்லது 2.25 ஹெக்டேர் பரப்புடையதாகலாம்.

நிலங்கள் தரம் வாரியாக நிர்ணயம் (Standardisation) செய்யப்பட்டன. மொத்தம் பதினாறு தரங்கள் இருந்தன. நிலங்களின் தரத்தை மாற்றும்போது "மடக்கு" என்று குறித்தார்கள். ஒரு தரத்து நிலத்துக்கு வரியாக வேலி ஒன்றுக்கு 100 கலம் நெல் என வரையறை செய்யப்படுகிறது. தோராயமாக ஓர் ஊர் என்பது 40 வேலிகள்

கொண்டதாகவும் 3000 கலம் நெல் விளைச்சலைக் கொண்டதாகவும் கொள்ளலாம். இந்த வளமிக்க காவிரி டெல்டா நிலப்பகுதிதான் சோழர்களின் பெருமைக்கும் அவர்களின் படையெடுப்புகளுக்கும் பெருந்துணையாக நின்றது. இப்பகுதியின் 1000 ஊர்களிலிருந்து 87000 மெட்ரிக் டன் நெல் அரசனுக்கு வரியாகச் சென்றது எனக்கொள்ளலாம். நெல் பணமாக மாற்றப்பட்டும் அரசனின் கருவூலம் சென்றது. கி.பி. 1000 முதல் கி.பி. 1100 வரையிலான காலம் சோழரின் உயர்வான காலம். இக்காலகட்டத்தில், ஆட்சிக்குட்பட்ட நிலப்பகுதி பெரியது. இராசராசன் காலத்தில் வென்ற பகுதிகளை நேரடி ஆட்சிக்குக் கொணர்தல் பெரிய பணி. இப்பணியால் மண்டலங்கள் உண்டாயின. குறுநில அரசுகளின் நிலப்பகுதிகள் கையகப்படுத்தப்பெற்று மண்டலங்களாக மாற்றப்பட்டன.

மண்டலங்களின் பெயரில் சோழ மண்டலம் என்ற பின்னொட்டு இணைந்தது. தொண்டை நாடு, ஜெயங்கொண்ட சோழமண்டலம் ஆனது. ஈழம் (ஈழத்தின் வடபகுதி), ஈழமான மும்முடிச்சோழமண்டலம் என்றாயிற்று. வேங்கிச் சாளுக்கியர் நாடு (ஆந்திரப்பகுதி), உத்தமச்சோழமண்டலம் ஆனது. ஆனால், பாண்டிய நாடு மட்டும் சோழமண்டலம் என்னும் பின்னொட்டைப் பெறவில்லை. அது, இராஜராஜப் பாண்டிநாடு என்று அழைக்கப்பட்டது. சோழமண்டலம் என்னும் பெயரே வெளியுலகத்தினருக்கு அறிமுகமாயிற்று. எனவே, போர்த்துகீசியர், இத்தாலியர் ஆகியோர் ”கோரமண்டல்” என்று குறிப்பிடலாயினர். சோழமண்டலம் என்னும் பெயரே “ச்சோரமண்டல்” என்றும் பின்னர் “கோரமண்டல்” என்றும் திரிந்தது. போர் எனில், கூடவே அழிவும் அங்குண்டு. சோழர்களின் போர்களாலும் நிறைய அழிவுகள் ஏற்பட்டன. எனவே, நிலப்பகுதிகள் மறு சீரமைப்புக்கும் ஒருங்கிணைப்புக்கும் உட்படுத்தப்பட்டன. இந்திய விடுதலைக்குப்பின் வல்லப பாய் படேல் சமஸ்தானங்களை இணைத்தது போன்றதொரு பணி.

**<u>கடாரப்படையெடுப்பு:</u>**

தமிழ்நாட்டுக்கும் தென்கிழக்காசிய நாடுகளுக்கும் நீண்ட காலமாகத் தொடர்பு இருந்துவந்துள்ளது. பர்மா, கம்போடியா, வியட்நாம், மலேசியா, சுமத்திரா (இந்தோனேசியா), பிலிப்பைன்ஸ் ஆகிய இந்நாடுகளில் தமிழ்க்கல்வெட்டுகள் உள்ளன. கி.பி. முதல் நூற்றாண்டு முதல் இப்பகுதியுடன் தொடர்பு இருந்தது. ஸ்வர்ணபூமி என்னும் இப்பகுதிக்கு வங்காளம், குஜராத், தமிழகம் ஆகிய இடங்களிலிருந்து குடி பெயர்ந்திருக்கின்றனர். ஜாவா என்னும் கடாரப்பகுதி காழகம் என்று குறிப்பிடப்பட்டது. தென்கிழக்காசிய நாடுகளிலிருந்து வந்த புத்த யாத்திரிகர்கள் - கடல் வழியாக வந்தவர்கள் - நிறையக்குறிப்புகள் இட்டுச்சென்றிருக்கிறார்கள். பல

குறிப்புகள் பழைய பிராகிருத எழுத்துகளில் உள்ளன. தாய்லாந்தில் ஒரே ஒரு கல்வெட்டு கிடைத்துள்ளது. தமிழி அல்லது பிராமி எழுத்தில் அமைந்த இக்கல்வெட்டு கி.பி. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. “பெரும் பதன் கல்” என்னும் பொறிப்பு அதில் உள்ளது. பொன்னை உறைத்துப்பார்க்கும் உறைகல்லாக அது இருக்கலாம் எனக்கருதப்படுகிறது. “பதன்” என்பது “பத்தன்” என்பதைக்குறிக்கலாம். “பத்தன்” என்பது பொற்கொல்லனைக் குறிப்பதாகும். ”தமராக்” என்னுமிடத்தில் உள்ள விஷ்ணு கோயில் அருகில் குளம் வெட்டியது பற்றிய ஒரு கல்வெட்டு கிடைத்துள்ளது. அதில், மணிக்கிராமத்தார் என்ற வணிகக்குழு பற்றிய குறிப்பு காணப்படுகிறது. சுமத்திராவின் மேற்குக்கரையில் இருக்கும் பாரூஸ் துறைமுக நகரில் சில கோயில்கள் உள்ளன. அங்குள்ள கல்வெட்டில் “வாரோசான தேசிப்பட்டணம்” என்னும் குறிப்புள்ளது. கற்பூரம் போன்ற வாசனைப்பொருள்கள் தமிழகத்திலிருந்து இங்கு இறக்குமதி ஆகியுள்ளன. ஜாகார்த்தா அருங்காட்சியகத்தில் உள்ள தமிழ்க்கல்வெட்டு, நானாதேசிகள் என்ற வணிகர்கள் அங்கு தங்கியிருந்தமை பற்றிக் கூறுகிறது.

பர்மாவில் உள்ள 13-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்று மலைமண்டலத்து வணிகரின் கொடையைப்பற்றிக் கூறுகிறது. மலைமண்டலம் என்பது கேரளப்பகுதியைக் குறிக்கும். நானாதேசிகள் என்னும் வணிகக்குழுவினர் தமிழ், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளைப் பேசிவந்துள்ளனர். ஆனால், கல்வெட்டுகளைத் தமிழ் மொழியிலேயே பொறித்துள்ளனர். ஜாவாவில் உள்ள ஒரு கல்வெட்டில் ஜாவா, தமிழ் ஆகிய இரு மொழிகளும் காணப்படுகின்றன. அக்கல்வெட்டில், தென்னிந்திய வணிகர் பற்றிய செய்தியும் அஞ்சுவண்ணத்தார் எழுவர் பெயரும் காணப்படுகின்றன.

கி.பி. 1005-இல் ஸ்ரீவிஜயத்து அரசன் சூளாமணிவர்மன் தமிழகதின் நாகப்பட்டினத்தில் புத்தவிகாரை ஒன்றைக்கட்டினான். ஸ்ரீவிஜயம் என்பது சுமத்திரா, மலேசியா ஆகியவற்றை உள்ளடக்கிய பகுதியாகும். லெய்டன் செப்பேடு என்னும் ஆனைமங்கலச்செப்பேட்டில் இச்செய்தி உள்ளது. இராசராசன் இந்தப் புத்தவிகாரைக்கு ஆனைமங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச்சந்தமாகக் கொடை அளித்துள்ளான். செப்பேட்டில், ஸ்ரீவிஜய அரசன், கிடாரத்தரையன் சூளாமணி பந்மன் என்று குறிப்பிடப்பெறுகிறான். புத்த விகாரை, சூளாமணி பந்ம விஹாரத்துப்பள்ளி எனக் குறிப்பிடப்படுகிறது. இராசேந்திரன் இந்தக்கொடை பற்றிய செப்பேட்டை முழுமையாக்கி கி.பி. 1014-இல் தந்துள்ளான். கி.பி. 1021 வரை சோழருக்கும் ஸ்ரீவிஜயத்துக்கும் இடையில் நட்பு நிலவியது.

கி.பி. 1025-இல் இராசேந்திரன் தென்கிழக்காசிய நாடுகளின்மேல் படையெடுப்பு நிகழ்த்தியது எதற்காக என்பதும் அப்படையெடுப்பின் விளைவுகள் யாவை என்பதும் எண்ணிப்பார்க்கத்தக்கவை. மரக்கலங்களைக்கொண்டு கடல் வழியே தென்கிழக்காசிய நாடுகளுக்குச் சென்று வணிகம் செய்த வணிகர்களுக்கும் மலாய் கடலோடி மக்களுக்கும் (Maritime people) எதோவொருவகை உரசல் அல்லது பூசல் ஏற்பட்டுள்ளது எனத்தெரிகிறது. இந்தச் சிக்கலால் இராசேந்திரன் படையெடுப்பு நிகழ்த்தியிருக்கிறான். ஆனால், இது பற்றி அங்கு கல்வெட்டுகள் எவையும் கிடைக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் சிக்கல் இராசேந்திரனின் தம்பியான வீரராசேந்திரன் காலத்திலும் தொடர்ந்திருக்கக்கூடும்; வீரராசேந்திரன் காலத்திலும் இப்படையெடுப்பு நிகழ்ந்துள்ளது. மலாய் மொழியில் கப்பல், வங்கம் ஆகிய சொற்கள் வழங்குகின்றன. இராசேந்திரனின் மெய்க்கீர்த்தியில் ஸ்ரீவிஜயம், கடாரம் எனவும், அஜே என்னும் பகுதி இலாமுரி தேசம் எனவும், நிகோபார் தீவுகள் நக்கவாரம் எனவும் குறிப்பிடப்பெறுகின்றன. இவற்றில், ஸ்ரீவிஜயம் 1000 கி.மீ. தொலைவும், நிகோபார் 1500 கி.மீ. தொலைவும், அஜே 300 கி.மீ. தொலைவும் கொண்டவை. மற்ற பகுதிகளையும் சேர்த்து மொத்தம் 6000 கி.மீ. தொலைவு படையெடுப்பின்போது கடல்வழிப்பயணம் நிகழ்ந்துள்ளது.

எந்தவகைக் கப்பல்கள் பயன்படுத்தப்பட்டன, கப்பல்கள் எங்கு கட்டப்பட்டன என்பது போன்ற செய்திகளுக்குப் போதுமான சான்றாதாரங்கள் இல்லை. ஒரு சில குறிப்புகளே கிடைக்கின்றன. மரக்கலம், தோணி ஆகியவை பற்றிய குறிப்புகள் கிருஷ்ணபட்டினத் துறைமுகத்தில் உள்ள கல்வெட்டில் காணப்படுகிறது. பாரூஸ் கல்வெட்டில், மரக்கலநாயன் என்னும் குறிப்புள்ளது. மரக்கலங்களை இயக்கிய கப்பல் தலைவனுக்கு இப்பெயர் வழங்கியது எனலாம். மரக்கலநாயன் என்னும் இச்சொல் பின்னர் மரக்கலராயர் எனவும், மரைக்காயர் எனவும் திரிந்தன. மங்களூரிலிருந்து தொடங்கி, கேரளக் கடற்கரையில் பல இடங்களில் படகு கட்டுமிடங்கள் இருக்கின்றன. ஆனால், தமிழகத்தின் மன்னார் பகுதியில் படகு கட்டுமிடங்கள் இருப்பதாகத்தெரியவில்லை. கோயில்களில் ஆயிரக்கணக்கான கல்வெட்டுகளை எழுதிவைத்தவர்கள், இராசேந்திரனின் படையெடுப்பு பற்றியோ மரக்கலங்கள் மூலம் சென்ற கடல்வழிப் பயணத்தைப்பற்றியோ எழுதவில்லை என்பது வியப்பானது. ஆனால், Manuscripts எனப்படும் ஓலை ஆவணங்களில் இது பற்றித் தகவல் கிடைக்கக்கூடும். ஓலை ஆவணங்கள் முந்நூறு, நானூறு ஆண்டுகள் நிலைத்து நிற்பவை. நிறையத் தகவல்கள் கொண்டவை. இவை ஆராயப்படவேண்டும். ஆனால்,

ஓலைச்சுவடிகள் இங்கே நன்கு பாதுகாக்கப்படுவதில்லை. அழிவை எதிர்கொண்டிருப்பவற்றுள் (Endangered species) ஓலைச்சுவடிகளும் அடங்கும்.

இங்கிலாந்தில், ஓலைச்சுவடிகள் போன்றவை ஒளிப்பட ஆவணங்களாக (Photo documentation) மாற்றப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. சீன, ஜப்பான் நாடுகளில் கி.பி. 500-இலிருந்து கிடைக்கும் ஓலை ஆவணங்களைப் பாதுகாக்கின்றார்கள். தமிழகத்தில், கி.பி. 1700 முதல் கி.பி. 1900 வரையிலான இருநூறு ஆண்டுகாலகட்டத்தைச் சேர்ந்த மோடி ஆவணங்கள் உள்ளன. ஆனால், அவற்றைப் படிக்க ஆள்கள் இல்லை. எனவே, ஓலை ஆவணங்களுக்கு முதன்மை அளித்து ஆவன செய்யவேண்டிய பணி உள்ளது.

---

சொற்பொழிவுக்கருத்துகளைக் கட்டுரை ஆக்கம் செய்தவர்:
து.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை

---



திரு. து. சுந்தரம்
கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.
doraisundaram18@gmail.com
அலை பேசி : 9444939156

---

7.

# திருநாதர் குன்று - நிசீதிகைக் கல்வெட்டும், சிற்பத் தொகுதியும்

-- கோ.செங்குட்டுவன், து.சுந்தரம்

விழுப்புரம் மாவட்டத்தின் பல பகுதிகளில் குறிப்பாக, செஞ்சிப் பகுதியில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சமணத் தடயங்கள் ஏராளமாக உள்ளன.

இன்று (06.08.15)கூட, அப்பம்பட்டுப் பகுதியில் சமணத் தடயமொன்று கண்டறியப் பட்டுள்ளதாக பத்திரிகைகளில் செய்திகள் வந்துள்ளன. மகிழ்ச்சி. இந்த நேரத்தில் வரலாற்றுச் சிறப்புவாய்ந்த திருநாதர்குன்று பற்றிய குறிப்பினை நண்பர்களின் பார்வைக்குப் பதிவு செய்யலாம் எனக் கருதுகிறேன்.




இக்குன்று அமைந்துள்ளப் பகுதி சிறுகடம்பூர் என்று அழைக்கப்படுகிறது. ஆனாலும் செஞ்சி நகரின் ஒரு பகுதியாகும். இந்தக் குன்றின் மீதுள்ள பிரம்மாண்டப் பாறையில் சமண முனிவர்களான 24 தீர்த்தங்கரர்களும் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளனர். இவர்கள் அனைவரும் அமர்ந்த கோலத்தில் இருக்கின்றனர். இச்சிற்பத் தொகுதியின்

காலம் கி.பி.9ஆம் நூற்றாண்டு. தமிழகத்தில் கழுகுமலைக்கு அடுத்து இங்குதான் 24 தீர்த்தங்கரர்களும் ஒரே சிற்பத் தொகுதியில் காணப்படுகின்றனர்.




இக்குன்றின் மேற்குப் பகுதியில் காணப்படும் நிசீதிகைக் (உண்ணா நோன்பிருந்து உயிர் நீத்தவர்களின்) கல்வெட்டு ஒன்றில், “ஐம்பத் தேழன சனந் நோற்ற சந்திர நந்தி ஆ சிரிகரு நிசீதிகை” எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது சந்திரநந்தி எனும் சமண ஆசிரியர் ஐம்பத்தேழு நாள் உண்ணா நோன்பிருந்து இங்கு உயிர்நீத்துள்ளார். இக்கல்வெட்டில்தான் முதன் முதலாக உயிர் எழுத்தில் ஒன்றான “ஐ“ இடம்பெற்றுள்ளதாக ஆய்வாளர்கள் தெரிவித்துள்ளனர். மற்றொரு கல்வெட்டு இளையபத்ரர் என்பவர் 30நாள் உண்ணா நோன்பிருந்து உயிர்நீத்ததைத் தெரிவிக்கிறது.



இக்கல்வெட்டுகளின் காலம் கி.பி.5-6ஆம் நூற்றாண்டுகளாகும். இந்த இடம் தொல்லியல்துறையின் பாதுகாப்பில் இருக்கிறது. வரலாற்றுக் குறிப்புகளைச் சொல்லும் தகவல் பலகைகள், வரலாற்றை நன்கு அறிந்தவர்களால் இதற்குமேல் யாருக்கும் வேண்டாம் என்று அகற்றப்பட்டுவிட்டன!

*****

-- து. சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை

கல்வெட்டுப்படத்தின் பாடம் - செங்குட்டுவன் சாக்கட்டியால் மூல எழுத்தின் மேல் விளம்பியபடி:

ஐம்பத்தேழன

சனந்நா

ரந்திரநந்திஆ

சிரிரரநிசீதிரை

இதில் பிழைபட விளம்பியுள்ளார்.

முதல் வரி சரியாக உள்ளது.

இரண்டாம் வரியில் "சனந்' என்பதுவரை சரி. அடுத்த எழுத்து "நா" என எழுதியுள்ளார். சரியான எழுத்து "நோ" ஆகும். அதற்கு அடுத்து இரு எழுத்துகளை செங்குட்டுவன் எழுதவில்லை. அவை "ற்ற" ஆகும்.

மூன்றாம் வரியில் முதல் எழுத்தைத் தவிர்த்து மற்றவை சரி. முதல் எழுத்து "ச" ஆகும்.

நான்காம் வரியில் "சிரி", என்பதும் "நிசீதி" என்பவை சரி. "ரர" என்பது "கரு" எனவும் "ரை" என்பது "கை" எனவும் இருக்கவேண்டும்.



சரியான பாடம் வருமாறு:

ஐம்பத்தேழன

சனந்நோற்ற

சந்திரநந்தி ஆ

சிரிகரு நிசீதிகை

**<u>சில விளக்கங்கள்:</u>**

1. ஐம்பத்தேழனசனந் என்பதை ஐம்பத்தேழு+ அனசநம் என்று பிரிக்க. ஐம்பத்தேழு-ஐம்பத்தேழு நாள்கள்.

2. அனசநம் என்பதை அன்+அசனம் எனப்பிரிக்க. அசனம்=உண்ணுதல்; அனசனம் = உண்ணாமை.

3. 57 நாள்கள் உண்ணாமல் நோன்பிருந்து இறந்தார். (நோற்ற என்னும் சொல்லை நோக்குக.)

4. சந்திரநந்தி என்னும் பெயருடைய ஆசிரியர் (ஆசிரிகரு=ஆசிரியர்; ஆச்சாரியர்)

5. நிசீதிகை - இறந்த இடத்தில் எழுப்பிய நினைவுக்கல்.

கல்வெட்டின் பார்வைப்படியின் ஒளிப்படத்தைப்பார்க்க.

---



திரு. கோ. செங்குட்டுவன்

ko.senguttuvan@gmail.com



திரு. து. சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கோவை.

doraisundaram18@gmail.com

---

8.

## நினைவலைகளில் கொடுமுடி சண்முகனார் ...

-- கோ. செங்குட்டுவன்.

90களின் தொடக்கம் அது. நான், தினப்புரட்சி நாளேட்டின் செய்தியாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்த நேரம். ஒருநாள், பொதுப்பணித்துறை அலுவலகத் திலிருந்து உதவியாளர் என்னிடம் வந்தார். "ஐயா உங்களை வரச் சொன்னார்"". உடனடியாக அந்த அலுவலகத்துக்குச் சென்ற நான், செயற்பொறியாளரின் அறைக்குள் சென்றேன். "வாங்க உட்காருங்க" என்று சொன்னவர், "என்னங்க ஏரியில பேருந்து நிலையம் கட்டப் போறாங்களாம்" என பதை பதைத்தார். "இதுக்கு எதிர்ப்ப பத்திரிகையிலப் பதிவு செய்யுங்களேன்" என்றார்.



அரசின் உத்தரவுகளை செயல்படுத்தக்கூடிய அதிகாரி, அப்படி நடக்கக் கூடாது என்று கருதுகிறார். வித்தியாசமான மனிதராக இருக்கிறாரே? என யோசித்தேன். ஆம், அவர்தான் தமிழ்கூறும் நல்லுலகம் நன்கறிந்த வரலாற்று ஆய்வாளர் பொறியாளர் நினைவில் வாழும் கொடுமுடி ச.சண்முகனார்.

அவர் மக்களை நேசித்தார். மனிதகுலம் கடந்து வந்தப் பாதையை அவற்றின் வரலாறுகளை நன்கு வாசித்தார். மாமன்னர்கள் ஏரிகளையும் குளங்களையும் கண்மாய்களையும் வெட்டினார்கள். இப்போது இருப்பவர்கள் அதை அழிக்கிறார்களே என வேதனைப்பட்டார். இதன் வெளிப்பாடுதான் ஒரு ஏரி பேருந்து நிலையமாக மாறுவதை கொடுமுடி சண்முகனாரால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. தமிழனின் பெருமைகளைப் பேசுவதோடு நில்லாமல் நம்முடைய வரலாற்றை மக்களிடம் கொண்டு செல்ல அவர் அயராது உழைத்தார். தான் வகித்து வந்தப் பதவியை இதற்குச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டார் என்றுதான் சொல்ல வேண்டும்.

கல்வெட்டுகளைப் படியெடுப்பதில், படிப்பதில் தேர்ந்திருந்த கொடுமுடி சண்முகனார், அந்தக் கலை தனக்குப்பின் வருபவர்களுக்கும் பயன்பட வேண்டும் என்பதற்காக விழுப்புரம், சேலம், திருச்செங்கோடு உள்ளிட்ட இடங்களில் மாணவர்களுக்கும்,

ஆசிரியர்களுக்கும் கல்வெட்டு பயிற்சி வகுப்புகளை நடத்தினார். அவரால் பயிற்றுவிக்கப்பட்ட பலர். இன்று அத்துறையில் வல்லோராக வலம் வருகின்றனர். தான் பணியாற்றிய இடங்களில் வரலாற்று முத்திரைகளைப் பதித்தவர் கொடுமுடியார். தருமபுரி அகழ்வைப்பகம், விழுப்புரம் மற்றும் திண்டிவனம் பொதுப்பணித்துறை அலுவலக வளாகங்கள் இன்றும் அவர் பெயரைச் சொல்லும்.

ஆர்க்காடு நவாபுக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் இடையே அடையாற்றுப் போர் நடந்த இடம் (சென்னை) தரமணி எனக் கண்டறிந்தது, கிருஷ்ணகிரி அணைப் பூங்காவில் ஆதிமனிதனின் கல்வீடு மாதிரி வடிவம் அமைத்தது, மேட்டூர் அணையின் 16 கண் பாலத்தில் பொறியாளர் எல்லீஸ் சிலையமைத்தது, திருச்செங்கோட்டில் கண்ணகிக்குக் கோட்டம் அமைப்பதற்கும், சிலப்பதிகாரம் மணிமேகலை காவியப் பாடல்கள் முழுவதும் கருங்கல்லில் பொறித்து மண்டபத்தில் அமைக்கவும், 200 அடி கோவலன் கண்ணகி சிலை அமைக்கவும் அரசுக்கு மதிப்பீடு அனுப்பியது, திருச்செங்கோடு மலைப் படிகளில் உயர்மட்டக் கருவிகள் மூலம் உயரம் கணித்து எழுதி வைத்தது, இராச வாய்க்கால் வெட்டிய அல்லாள இளையா நாயகர் பற்றிய கொங்கு மண்டல சதகப் பாடலும் வரலாற்றுக் குறிப்பும் கருங்கல்லில் பொறித்து சேலம் வேலூர் அருகில் உள்ள சோடர்பாளையம் அணைக்கட்டில் பதித்தது என கொடுமுடியார் அவர்களின் எண்ணற்றப் பணிகளின் பட்டியல் தொடர்கிறது.

விழுப்புரத்தில் அவர் பணியாற்றிய காலக்கட்டங்களில் பொதுப்பணித்துறை அலுவலக வளாகத்தில் இருந்த விருந்தில்லங்களுக்கு திருமுடிக்காரி இல்லம், நல்லியக் கோடன் இல்லம், கவிகாளமேகம் இல்லம் என பெயர் சூட்டினார். சென்னை தேசிய நெடுஞ்சாலையில் வீடூர் அணை முகப்பில் 10 அடி உயரத் தூண் எழுப்பி அதில் தோகை விரித்தாடும் மயிலின் சிற்பத்தைப் பொறித்து, வான் மழை குறித்துத் தமிழ் இலக்கியங்கள் கூறும் பாடல்களை கல்லில் பதிக்கச் செய்தார். அப்பர் பெருமான் பிறந்த திருவாமூர் மற்றும் சுந்தரமூர்த்தி நாயனார் பிறந்த திருநாவலூர் ஆகிய ஊர்களுக்கிடையே கல் நடப்பட்டு அதில் அவர்களைப் பற்றிய குறிப்புகளை எழுதி வைத்தார். எண்ணாயிரத்தில் கவிகாளமேகம் பிறந்த ஊர், நாலடியார் பாடியோர் வாழ்ந்த ஊர் எனும் திசைக் கற்களை நடச்செய்தார்.

மாமன்னர் இராசேந்திரன் கல்வெட்டினைத் தாங்கிய கீழ்எடையாளம் ஏரியில், கல்வெட்டு வாசகம் இடம்பெறச் செய்தார். திருச்சி நெடுஞ்சாலையில் சேந்தமங்கலம் கிராமத்தில் காடவராயன் தலைநகரம் எனும் தகவலை கல்லில் பொறிக்கச் செய்தார். திருக்கோவலூர் அணைக்கட்டில், திருமுடிக்காரியின் புகழ்பாடும் புறநானூற்று

வரிகளை எழுதி வைத்தார். கடலியில், இராஜா தேசிங்கு வீர மரணம் எய்திய இடம் என கல் நட்டார்.

கொடுமுடியார் அவர்கள் கள ஆய்வுக்காகச் செல்லும் இடங்களில் கிடைக்கும் நடுகற்கள், கல்வெட்டுகள், ஏரித் தூம்புகள் போன்றவற்றை கொண்டுவந்து விழுப்புரம் மற்றும் திண்டிவனம் பொதுப்பணித்துறை அலுவலக வளாகங்களில் திறந்தவெளி அருங்காட்சியகங்களை அமைத்தார். “இதை எடுத்து வர்றதுக்குள்ள போதும் போதும்னு ஆயிட்டதுங்க” என்பார். காரணம், இவற்றில் பல காணிக் கல்லாகவும், துணி துவைக்கவும், வழிபாட்டிற்குரி யதாகவும் பயன்படுத்தப்பட்டவை. இவற்றை எடுப்பதற்கு அப்பகுதி மக்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். அதனால்தான் மிகுந்த சிரமம்-எதிர்ப்புகளுக்கிடையே அவை பொதுப்பணித்துறை ஈப்பில் எடுத்துவரப்பட்டன.


கொடுமுடியாரால் சேகரிக்கப்பட்ட நினைவுச் சின்னங்கள்.
பொதுப்பணித்துறை அலுவலக வளாகம்,
விழுப்புரம்.

பழந்தமிழர் தொழில்நுட்பத் திறன், குமரிக்கண்டம் கடலுள் மூழ்கவில்லை, தொல்காப்பியம் உள்ளிட்ட நூல்களை இயற்றியுள்ள கொடுமுடி ச.சண்முகனார், வரலாறு மற்றும் இலக்கியத் தகவல்களை நேரிடையாக எடுத்துச் சொல்வதில் ஆர்வம் காட்டினார். விழுப்புரத்தில் அனைத்து இலக்கிய அமைப்புகளையும் ஒருங்கிணைத்து, “விழுப்புரம் இலக்கியக் கழகம்” எனும் அமைப்பினை ஏற்படுத்தி, வாரந்தோறும் சனிக்கிழமைகளில் அவர் கூட்டங்கள் நடத்தியப் பாங்கினை விழுப்புரம் மண் மறந்திடாது.

கொடுமுடி சண்முகனார் அவர்கள் பார்ப்பதற்கு எளிமையானவர். பழகுவதற்கு இனிமையானவர். தன்னில் வயதில் எவ்வளவு இளையோராக இருந்தாலும்

அவர்களுக்கும் மதிப்பு கொடுத்தார். மாற்றுக் கருத்துக்களை அனுமதிக்கும் ஜனநாயக மாண்புடையவர். இதற்கு உதாரணம் ஒன்றை மட்டும் சொல்லி முடிக்கலாம் என நினைக்கிறேன்.

பொதுப்பணித் துறையின் சார்பில் 01.06.1991இல் தேசிய நீர்வள நாள் கவியரங்கம் கவிஞர் த.பழமலய் அவர்களின் தலைமையில் நடந்தது. அதில் பங்கேற்ற நான் முதன் முதலாக கவிதை என்று ஒன்றைப் படித்தேன். அதில், "பிறக்காதக் குழந்தைக்குப் பெயர் சூட்டுவிழா நடத்துவதைப் போல் இல்லாத வளத்துக்கு விழா கொண்டாடுகிறோம்" எனத் தொடங்கி, "வீட்டுக்கு ஒரு யூக்லிபட்ஸ் மரம் வளர்ப்போம் காட்டுக்கு ஒரு வீரப்பனை வளர்ப்போம்" என்று முடித்தேன்.

அங்கு வந்திருந்த அரசுத்துறை அதிகாரிகளுக்கு அதிர்ச்சி. என்ன இந்தப் பையன் இப்படி படிக்கிறானே? என்று. ஆனால், கொடுமுடியார் புன்முறுவலுடன் அமைதியாக இருந்தார். அடுத்த சில நாள்களில் கவியரங்கக் கவிதைகள் ரோனியோ போடப்பட்டு புத்தக வடிவில் பங்கேற்பாளர்களுக்கு வழங்கப்பட்டது. அதில் என்னுடைய கவிதை(?)யும் வரிக்கு வரி மாறாமல் அப்படியே இருந்தது. என்னுடைய எழுத்து கொடுமுடியார் அவர்களால் அங்கீகரிக்கப்பட்டிருந்தது.

தான் செய்தப் பணிகள் தனக்குப் பின்னும் நிலைத்திருக்க வேண்டும் என கொடுமுடியார் விரும்பினார். பொதுப்பணித்துறை அலுவலகங்களில் திறந்தவெளி அருங்காட்சியகங்களை அமைத்தபோது, அவை தொடர்ந்து காப்பாற்றப்பட அரசாணைகளையும் வெளியிடச் செய்தார். ஆனால் அவர் மறைவுக்குப் அந்த நினைவுச் சின்னங்கள் அந்தத் துறையைச் சேர்ந்தவர்களாலேயே போற்றிப் பாதுகாக்கப்பட வில்லை என்பதுதான் வேதனை தரத்தக்கதாகும்.

மக்களிடம் வரலாற்றைக் கொண்டுச் செல்லும் மகத்தானப் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட பொறிஞர் கொடுமுடி ச.சண்முகனார் 19.03.2005இல் மறைந்தார். இதனைத் தொடர்ந்து, விழுப்புரத்தில் பல்வேறு அமைப்புகள் பங்கேற்ற நினைவஞ்சலிக் கூட்டமொன்றை, 01.04.2005இல் கல்வெட்டாய்வாளர் திரு.வீரராகவன் அவர்களும், நானும் முன்னின்று நடத்தியதை இங்குப் பணிவுடன் பதிவு செய்கிறேன்.

தொடங்கிய இடத்திற்கே மீண்டும் வருகிறேன். கொடுமுடியார் எதற்காகப் பதை பதைத்தாரோ அந்த இடத்தில், 118.54 ஏக்கரிலான விழுப்புரம் பூந்தோட்டம் ஏரியில்,

1998இல் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தினை உள்ளடக்கிய பெருந்திட்ட வளாகமும், 2000ஆம் ஆண்டில் பேருந்து நிலையமும் அமைக்கப்பட்டு விட்டது. இனி நாம் ஏரிகளை, கொடுமுடியார் போன்றவர்கள் சேகரித்து வைத்தத் தூம்புக் கற்களில் மட்டுமே பார்க்க முடியும்! அதுவும் அந்தக் கற்கள் இருந்தால் மட்டுமே...

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

9.

## இசைக்கும் கற்குதிரைகள்...

-- கோ. செங்குட்டுவன்.

சேந்தமங்கலம்... திருச்சி-சென்னை தேசிய நெடுஞ்சாலையில், கெடில நதிக்கரையோரம் அமைந்துள்ள கிராமம்.

பிற்காலப் பல்லவர் எனப்படும் காடவராயர்களின் தலைநகராக விளங்கிய இந்த ஊர், வரலாற்றில் நீங்கா இடம்பிடித்ததற்கு கீழ்க்காணும் நிகழ்வு முக்கியக் காரணமாகும்.

கி.பி.1231இல் பாண்டியனிடம் தோற்றச் சோழமன்னன் மூன்றாம் இராசராசன், தன் தலைநகரை விட்டு குந்தள அரசனிடம் ஆதரவு கேட்டு ஓடுகிறான். வந்தவாசி வட்டம் தெள்ளாறு அருகே அவனை வழிமறித்த, முதற் கோப்பெருஞ் சிங்கன் என்றழைக்கப்படும் அழகியசீயன், சோழப் பெருவேந்தனுடன் மோதுகிறான். இதில் மூன்றாம் இராசராசன் தோற்றுவிட, அவனையும் அவனது உற்றார் உறவினர் படைவீரர் என அனைவரையும் கொண்டு வந்து, சேந்தமங்கலத்தில் சிறைவைத்தான் முதற் கோப்பெருஞ்சிங்கன்.

அழகியசீயனின் மகனான இரண்டாம் கோப்பெருஞ்சிங்கன் (கி.பி.1243- கி.பி.1279) சிதம்பரம் கோயிலின் கீழைக்கோபுரத்தையும், தில்லைக் காளிக்கு கருங்கல் கோயிலையும் எடுத்தவன். சிறந்தக் கவிஞனாகத் திகழ்ந்த இரண்டாம் கோப்பெருஞ்சிங்கன் கலைகளில் ஈடுபாடு மிக்கவன். "சாகித்ய ரத்னாகரன்" என்று இவனுக்கு வழங்கப்பட்டப் பட்டத்திலிருந்து இதை அறியலாம். இரண்டாம் கோப்பெருஞ்சிங்கன் இசையிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவன். இதனை சேந்தமங்கலத்தில் உள்ள இரண்டு கற்குதிரைச் சிற்பங்கள் உணர்த்துகின்றன. இவை ஒரே கல்லில் இணைக்கப்பட்டுள்ளன. இந்தச் சிற்பங்களின் முகம், காது, முதுகு என எங்குத் தட்டினாலும் வெவ்வேறு விதமான ஓசைவருகிறது. இப்படிப்பட்ட அற்புதமான, அதிசயக் கல்லைக் கண்டறிந்து அதில் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இதுபோல் மதுரை உள்ளிட்ட இடங்களில் உள்ள கோயிற் தூண்களிலும் ஓசை வருவதையும் நீங்கள் அறிவீர்கள். தமிழர்களின் கலைத்திறனுக்கும், அதில் நமக்கிருந்த நுட்பமான ஈடுபாட்டிற்கும் சாட்சியாக நின்றுள்ளது சேந்தமங்கலம் இசைக்கும் கற்குதிரை சிற்பங்கள். சேந்தமங்கலம் கோயிலில் இருந்து சிலஅடி தூரத்தில் இருக்கும் குளக்கரையில் இந்தச் சிற்பங்கள் இருக்கின்றன. இரண்டு சிற்பங்களில் ஒன்று மிகவும் சிதைக்கப்பட்டுள்ளது. இதில் எப்படி ஓசை வருகிறது என்பதைக் கண்டறிவதற்காக நம்மவர்கள் நடத்திய அறிவாளித்தனமான ஆய்வின் வெளிப்பாடு, இந்தச் சிதைவு. இப்போது ஓரேயொரு சிற்பம் மட்டும் முழுமையாக நின்று கொண்டிருக்கிறது.

இந்த இசைக்கும் கற்குதிரைகள் குறித்தத் தகவல் 1995இல் தினமணிக் கதிரில் செய்திக் கட்டுரையாக வெளியானது. 2005ஆம் ஆண்டு வாக்கில் சேந்தமங்கலம் சென்ற நான், புதர்களுக்கிடையே இருந்தச் சிற்பங்களைப் புகைப்படம் எடுத்தேன். இதனைத் தொடர்ந்து அப்போதைய விழுப்புரம் மாவட்ட ஆட்சியர் திரு.கா.பாலச்சந்திரன் இ.ஆ.ப., அவர்களின் கவனத்திற்குக் கொண்டு சென்றேன். வரலாற்றின் மீது ஈடுபாடு கொண்ட அவர், உடனடியாக சேந்தமங்கலத்துக்குப் புறப்பட்டு வந்துவிட்டார். சிற்பங்களைப் பார்த்து வியந்த மாவட்ட ஆட்சியர். இவற்றைப் பாதுகாக்கும் வகையில் விழுப்புரத்திற்குக் கொண்டுச் செல்வோம் என்றார்.


மாவட்ட ஆட்சியருடன் நான்

இதற்கிடையில் சட்டமன்றத் தேர்தல் வந்தது, தேர்தலுக்குப் பின்னர் ஆட்சியரும் மாறினார். அவருக்குப் பின் வந்தவர்கள் இதில் அக்கறைக் காட்டவில்லை. காடவராயனின் இசைக்கும் கற்குதிரைச் சிற்பங்கள், சேந்தமங்கலம் குளக்கரையில் மீண்டும் புதர்கள் மண்டி, அப்படியே கிடக்கின்றன.




Musical Stone Horse at Sendhamangalam

Sendhamangalam, Tamil Nadu, India

[Nearby city: Ulundurpet, Villupuram, Cuddalore]

coordinates: 11.746995, 79.378339

Google Map: https://goo.gl/maps/8Oefh

---



திரு. கோ. செங்குட்டுவன்

ko.senguttuvan@gmail.com

---

**10.**

# களப்பிரர் கால ஸ்ரீசிகாரி பல்லவேசுவரம் - மேலச்சேரி

-- கோ. செங்குட்டுவன்.

பிரம்மாண்ட பாறைக்கு அடியில் செங்கற்களால் கட்டப்பட்டிருக்கிறது சிகாரி பல்லவேசுவரம் எனப்படும் மத்திளேசுவரர்க் கோயில்.




மகா மண்டபம், அர்த்த மண்டபம், மூலவர் கருவறை என மூன்று நிலைகளைக் கொண்டுள்ளது இக்கோயில். அர்த்த மண்டபத்தில் இருந்து கருங்கற் குடைவரைத் தொடங்குகிறது.

4.9 அடி உயரம், 7அடி சுற்றளவில் எண் கோணத்திலான (எட்டுப் பட்டை) ஆவுடையார்மேல் பிரம்மாண்ட சிவலிங்கம் அமைக்கப்பட்டுள்ளது. பீடமும் லிங்கமும் அதே (தாய்ப்) பாறையில் அமைக்கப்பட்ட உருவங்கள் ஆகும். கூரையில் தாமரை காட்டப்பட்டுள்ளது.




"கருவறையில் தாய்ப் பாறையிலான இலிங்கத் திருமேனியும் கூரையில் தாமரையும் அமைந்திருப்பது தமிழ்நாட்டிலேயே சிகாரி பல்லவேசுவரத்திலும் (மேலச்சேரி) சித்தன்ன வாசலிலும்தான்" என்பர் ஆய்வாளர்கள் மு.நளினி, இரா.கலைக்கோவன். (நூல்: மகேந்திரர் குடைவரைகள்)

இக்கோயிலின் வடக்குப் பகுதி தூண் ஒன்றில் வடமொழிச் சாசனம் பல்லவ கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. இதனைத் தமிழப்படுத்தியுள்ள மயிலை சீனி.வேங்கடசாமி "சாசனத்தில் கூறப்பட்டுள்ள சந்திராதித்யன் என்பவன் பல்லவ குடும்பத்தைச் சேர்ந்த சிற்றரசனாக இருக்கக்கூடும். இக்கோயிலின் அமைப்பு

முதலாம் மகேந்திர வர்மன் காலத்து அமைப்பை போன்றிருக்கிறது. இதனால் இக்கோயில் கி.பி.7ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக கருதப்படுகிறது" என தெரிவித்துள்ளார். (நூல்: மகேந்திர வர்மன்)

"மேலச்சேரி குடைவரை சிம்ம விஷ்ணு காலத்தில் களப்பிரரால் அமைக்கப்பட்டது" என்று தமது களப்பிரர் குடைவரைக் கோயில் எனும் கட்டுரையில் தெரிவிக்கிறார் நடன.காசிநாதன். (நூல்: வரலாற்றுத் தடயம்)

கருவறைக்கு வெளியே அம்மன், விநாயகர், வள்ளி தெய்வானையுடன் ஆறுமுகசாமி ஆகியோர் காட்சி தருகின்றனர். இச்சிற்பங்கள் 14,15ஆம் நூற்றாண்டு காலத்திய தாகும்.

கோயிலுக்கு வெளியே கிழக்குப் பார்த்து, கழுத்தில் முறுக்கிய மாலைகளுடன், கால்களை மடக்கிய நிலையில் சோழர் காலத்து நந்தி காணப்படுகிறது. அதன் மடக்கிய கால்களுக்கிடையே சிறிய வடிவிலான லிங்கம் இடம்பெற்றுள்ளது. "இதுபோல் லிங்கமணைத்த சோழர் கால நந்தியை இதுநாள் வரை பார்த்ததில்லை" என்கின்றனர் ஆய்வாளர்கள் மு.நளினி, இரா.கலைக்கோவன்.



இக்கோயில் தற்போது ஸ்ரீபிரஹன்நாயகி உடனுறை மத்தளேசுவரர் கோயில் என்றழைக்கப்படுகிறது.

மிகவும் சிதைந்த நிலையில் காணப்படும் ஸ்ரீசிகாரி பல்லவேசுவரம் புனரமைப்புக்காக காத்திருக்கிறது.

மேலச்சேரியின் தெற்கில் வனப்பகுதியில் மலையடிவாரத்தில் அமைந்துள்ளது ஸ்ரீபச்சையம்மன் ஆலயம். மூலவர் சொக்கநாதர்.




ஆலயத்தின் வெளியே முனிவர் எழுவரின் சிலைகள் பிரம்மாண்டமாகக் காட்சியளிக்கின்றன. இக்கோயில் ஏராளமானோருக்கு குல தெய்வக் கோயிலாகும்.




மேலச்சேரி:

செஞ்சி - செவலப்புரை சாலையில் 5ஆவது கி.மீ.இல் இருக்கிறது.

Melacherry, Tamil Nadu 604202, India

Coordinates:

PiraganNayaki Temple: 12.288315, 79.395321

Pachaiamman Temple: 12.270637, 79.377868

Google Map: https://goo.gl/maps/2FDkv

---



திரு. கோ. செங்குட்டுவன்

ko.senguttuvan@gmail.com

---

## 11.

# வழுதாவூர் கோட்டை

-- கோ. செங்குட்டுவன்.

வழுதாவூர் -

செஞ்சி, புதுச்சேரி வரலாற்றில் நீங்காத இடத்தைப் பிடித்த ஊர்.

இந்தப் பகுதியின் கில்லேதாராக இருந்தவர் சயீத்கான். மும்பையில் இருந்து புதுச்சேரிக்குக் குடியேறியிருந்த இவர், வழுதாவூரை விலைக்கு வாங்கிக் கோட்டைக் கொத்தளங்களுடன் ஆட்சி செய்து வந்தார். இவரது மகன் மகமத்கான். சயீத்கானின் நெருங்கிய நண்பராக விளங்கியவர் சொரூப்சிங். இராஜாதேசிங்கின் தந்தை.

இராஜா தேசிங்குடனானப் போரில் மகமத்கான் மறைந்த பின், வழுதாவூர் கோட்டை ஆற்காடு நவாப் கைகளுக்குச் சென்றது. 1742 வாக்கில் ஆற்காடு சுபாவில் நிலவிய குழப்பமான நிலைமையால் அங்கிருந்து வெளியேறிய நவாப் மீர்அசத், வழுதாவூரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்துள்ளார். இவரதுப் படையணிகள் பிரெஞ்சு வசமிருந்த அபிஷேகப்பாக்கம் வரை சென்று கொடியேற்ற முனைந்த நிகழ்வுகளும் அரங்கேறியுள்ளன.

1748 செப்டம்பரில் பிரெஞ்சுப் படைகள் சென்னையைக் கைப்பற்றின. இந்த நடவடிக்கைக்கு ஆற்காடு நவாபான அன்வருதீன்கான் கடும் எதிர்ப்புத் தெரிவித்தார். இதுபற்றி ஆலம்பரை நிசாமுக்குக் கடிதம் எழுதிய பிரெஞ்சு கவர்னர் டூப்ளே, "ஆற்காடு நவாப் பிரதேசத்தில் இருக்கும் வில்லிய நல்லூரையும் (வில்லியனூர்), வழுதாவூரையும் தந்தால் சென்னையை விட்டு விடுவதாக"த் தெரிவித்திருந்தார்.

புதுச்சேரியை ஆட்சி செய்து கொண்டிருந்த டூப்ளேவுக்கு, அருகில் உள்ள வழுதாவூர் மீது கண் இருந்து வந்ததற்குக் காரணம், மற்றெந்த ஜாகீரிலும் இல்லாத அளவுக்கு இந்த ஜாகீரில் இருந்து மட்டும் குத்தகைப் பணமாக வருடத்திற்கு ரூ.ஒரு லட்சம் வந்து கொண்டிருந்தது. இதற்கிடையே 1750இல் செஞ்சியை வெற்றி கண்டார் டூப்ளே.

அப்போது தக்காண சுபேதராக இருந்த சலபத் சங் என்பவர், வழுதாவூர் உள்ளிட்ட நூறு கிராமங்களை பிரெஞ்சியருக்கு வழங்கினார். டூப்ளேவின் கனவும் நனவானது.

அடுத்த 10ஆண்டுகளில் நிலைமை மாறியது. கர்னல் அயர்கூட் தலைமையிலான ஆங்கிலேயேப் படை திண்டிவனம், பெருமுக்கல் வழியாக புதுச்சேரியை நோக்கி முன்னேறியது. 1760 மார்ச் மாதவாக்கில் புதுச்சேரியில் போர் மேகங்கள் சூழ்ந்திருந்தன. புதுச்சேரியில் உயர் பதவியில் இருந்தவர்கள், வணிகர்கள் உள்ளிட்ட அனைவரும் கட்டாயம் போரில் ஈடுபட வேண்டும் என்று பிரெஞ்சு அரசாங்கம் உத்தரவுப் போட்டது. இதனை எதிர்த்தவர்கள் காலில் சங்கிலி பூட்டப்பட்ட நிலையில், கால் நடையாகவே புதுச்சேரியில் இருந்து வழுதாவூர் கொண்டு வரப்பட்டு, இங்கிருந்தக் கோட்டையில் அடைக்கப்பட்டனராம்.

இதனிடையே 1760 ஏப்ரல் 16இல் அயர்கூட் தலைமையிலான ஆங்கிலேயப் படை வழுதாவூர் கோட்டையைப் பிடித்தது. அங்கு அடைத்து வைக்கப்பட்டிருந்தவர்கள் அடித்து விரட்டப்பட்டனர். தொடர்ந்து கோட்டையும் இடித்துத் தரைமட்டமாக்கப் பட்டது. அடுத்த சிலநாட்களில் புதுச்சேரி அவர்கள் வசம் சென்றதை வரலாற்றை அறிந்தவர்கள் அறிவார்கள்.



வழுதாவூரில் மேடாகத் தெரியும் அந்தப் பகுதியை உள்ளூர்க்காரர்கள் கோட்டை மேடு என்றழைக்கின்றனர். நீண்ட அகழியும், நாற்புறமும் நிற்கும் காவற் கோபுரங்களும், அங்குக் கோட்டை இருந்ததற்கான முக்கியத் தடயங்களாக நிற்கின்றன. மேலும் செங்கல்லால் ஆன நீண்ட கட்டடம் ஒன்றும், கோட்டைமேடுப் பகுதியில் காட்சியளிக்கிறது. இது, கோட்டை களஞ்சியம் என்றழைக்கப்டுகின்றது.

வழுதாவூர் கோட்டை இருந்தப் பகுதியைப் பார்ப்பதற்கும், பிரெஞ்சு அரசு குறித்த ஆய்வை மேற்கொள்ளவும் வெளிநாட்டவரும் வருகின்றனர். அவர்களுக்குத் தகவல் அளிக்கவும் இங்கு யாரும் கிடையாது. இந்த இடம் தொல்லியல் துறையின் கட்டுப்பாட்டில் இருப்பதற்கான அடையாளங்களும் அங்கில்லை.

எஞ்சி நிற்கும் களஞ்சியத்தைக் கூட, அப்பகுதியினரின் துணையின்றி நாம் நெருங்க முடியாது. சுற்றிலும் கரும்பு வயல்கள். நடுவில் காணப்படும் இந்தக் கட்டடத்தை அடைய நான் கடும் பிரயத்தனப்பட்டேன்.

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

12.

# கபிலர் குன்று

-- கோ.செங்குட்டுவன்.

2013ஆம் ஆண்டின் இறுதியில் ஒருநாள், சுட்டெரிக்கும் மத்தியான வெய்யில் நேரம். அரகண்டநல்லூர் அதுல்ய நாதேசுவரர்க் கோயிலுக்குச் சென்ற நான், அந்தக் குன்றில் இருந்துப் பார்த்தேன்.

அதோ மேற்கே, தென்பெண்ணையாற்றில் அழகுறக் காட்சியளிக்கிறது கபிலர் குன்று.




அதுல்ய நாதேசுவரர்க் கோயிலின் பின்பக்கமாக ஆற்றில் இறங்கிவிட்டேன். இந்த ஆற்றில் புனல் எல்லாம் ஓடி, ஆண்டுக் கணக்கில் ஆகிறது. மணல்தான். அதுவும் சுரண்டப்பட்டு வருவதைத்தான் அண்மையில் பார்த்தோமே!

அங்கிருந்து நடக்கத் தொடங்கினேன். அப்போதுதான் தெரிந்தது நான் எடுத்த முடிவு மிகவும் தவறானது என்று. ஏனெனில் அங்கிருந்து கபிலர் குன்று தொலைவுதான்.

ஆற்று மணலில் நடப்பது... கால்கள் பின்னியது. ஆனாலும் முன் வைத்தக் காலை பின்வாங்க மனம் ஒப்பவில்லை. நடக்கத் தொடங்கினேன் புதையலைத் தேடுபவன் போல. ஆம், வரலாற்றுப் புதையலைத் தேடி.

சங்கப் புலவரான கபிலருக்கும் மலையமானாட்டின் தலைநகராக விளங்கிய திருக்கோவலூருக்கும் நெருங்கியத் தொடர்பு இருக்கிறது.

பாரியின் நெருங்கிய நண்பராக விளங்கிய கபிலர், திருக்கோவலூர் மன்னன் மலையமானையும் புகழ்ந்திருக்கிறார். பாரியின் மறைவுக்குப் பின் அவரது இருமகள்களை அழைத்துக் கொண்டு திருக்கோவலூர் வந்த கபிலர், அப்பெண்களை மலையமானிடம் அடைக்கலப்படுத்திவிட்டுப் பெண்ணையாற்றங் கரையில் நோன்பிருந்து (வடக்கிருந்து) உயிர்நீத்தார்.

திருக்கோவலூர் வீரட்டநாதர் கோயில் கருவறைச் சுவற்றில் பொறிக்கப்பட்டுள்ள முதலாம் இராஜராஜனின் அவையில் அறங்களை எடுத்துக்கூறும் உயர்நிலை அலுவலனாக இருந்த கம்பன் வீதிவிடங்கன் (கி.பி.985) என்பவனால் பொறிக்கப்பட்டக் கல்வெட்டுச் சாசனம் கீழ்க்காணும் தகவலைத் தெரிவிக்கிறது:

> வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
> தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
> மொய் வைத்தியலு முத்தமிழ் நான்மைத்
> தெய்வக் கவிதை செஞ்சொற் கபிலன்
> மூரிவண் தடக்கைப் பாரிதன் அடைக்கலப்
> பெண்ணை மலையர்க் குதவிப் பெண்ணை
> அலைபுன லழுவத் தந்தரி ஷஞ்செல
> மினல்புகும் விசும்பின் வீடு பேறெண்ணிக்
> கனல்புகுங் கபிலக் கல்லது.

கபிலர் புராணத்தை விளக்கும் வகையிலான 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓவியம் திருக்கோவலூர் வீரட்டநாதர் கோயிலில் தீட்டப்பட்டிருந்தது. கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பு இடம்பெற்றிருந்தது. இப்போது இல்லை. அதன்மீது வெள்ளையடிக்கப்பட்டுவிட்டது.

வீரட்டநாதர்க் கோயில் கல்வெட்டில் குறிப்பிடப்படும் கபிலக் கல் - கபிலர் குன்று - திருக்கோவலூர் நகரத்திற்கு முன்னதாகவே, தென்பெண்ணையாற்றின் தென்கரையில் (கீழையூர் தரைப் பாலத்தின் மேற்கில்) தனித்தப் பாறையாகக் காணப்படுகின்றது. இந்தப் பாறைமீது செங்கல்லால் கட்டப்பட்டக் கோயிலும், அதனுள் இலிங்கமும் இடம்பெற்றுள்ளது.

“இதில் உள்ள இலிங்கத் திருமேனியின் பெயர் கபிலேசுவரர் என்பதாகும். இது சோழர் காலத்தில் சங்கத் தமிழப் புலவன் கபிலனுக்காக எடுக்கப்பெற்ற பள்ளிப்படை கோயிலாக இருந்திருக்க வேண்டும்” என்பார் குடவாயில் பாலசுப்பிரமணியன் (நூல்: கபிலக் கல்). ஆனாலும், இது கி.பி.14ஆம் நூற்றாண்டு கட்டடப் பாணி என்கின்றனர் தொல்லியல் அறிஞர்கள்.

எப்படியோ, தட்டுத் தடுமாறி கபிலர் குன்றினை அடைந்துவிட்டேன். பாறைக்கு மேலே செல்ல நல்ல முறையில் படிக்கட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. சிறிய ‘கேட்’ திறந்திருந்ததால் சுலபமாகச் செல்ல முடிந்தது. இந்த இடம் தமிழகஅரசின் தொல்லியல் துறையால் பாதுகாக்கப்பட்டு வருகிறது. மகிழ்ச்சிதான். ஆற்றங்கரை என்பதால், திறந்த வெளியில் நடக்கும் சகலவிதமானக் காரியங்களும், கபிலர் குன்றைச் சுற்றிலும் நடந்து வருகின்றன. வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தக் கபிலர் குன்றினைக் காண விரும்புவோர் இந்த அவலங்களையும் கடந்துதான் செல்ல வேண்டியிருக்கிறது...!



Coordinates:

Kabilar Kundru, State Highway 7, Tamil Nadu 605753, India

Then Pennai River

11.972793, 79.211080

Google Map: https://goo.gl/maps/gBeos

---



திரு. கோ. செங்குட்டுவன்

ko.senguttuvan@gmail.com

---

**13.**

## விழுப்புரம் புனித பிரான்சிஸ் சவேரியார் ஆலயம்

-- கோ.செங்குட்டுவன்.

விழுப்புரத்தின் பழமைவாய்ந்த கிறிஸ்துவ தேவாலயம். இந்த ஆலயம் 1878இல் உருவாக்கப்பட்டது. முதல் பங்குதந்தையாக SOURIE MARINDER பொறுப்பேற்றார். தொடர்ந்து பல ஆண்டுகள் வெள்ளைக்கார பாதிரியார்கள்தான் இங்கு பங்கு தந்தைகளாக இருந்திருக்கின்றனர். 1886இல் ஐரோப்பிய கட்டடக் கலை நயத்துடன் கூடிய சவேரியார் ஆலயம் கட்டப்பட்டது.



தொடக்கத்தில் நங்காத்தூர் பங்கில் இருந்த விழுப்புரம் புனித சவேரியார் ஆலயம் 1895இல் தனிப்பங்காக உருவானது. வழுதரெட்டி, தும்பூர், ஏனாதிமங்கலம், ஆலாத்தூர் ஆகிய கிராமங்கள் இதன் பங்கிற்கு உட்பட்டவையாகும். பழைய ஆலயம் கட்டப்பட்டு நூறாண்டு ஆனதையொட்டி புதுவை-கடலூர் மறைமாவட்ட பேராயர் வி.எஸ்.செல்வநாதர் முயற்சியில் தற்போதுள்ள புதிய ஆலயம் 02.12.1986இல் எழுப்பப்பட்டது.




இந்த ஆலயத்தில் ஆண்டுதோறும் நவம்பர் 25ஆம் தேதி புனித சவேரியார் திருவிழா கொடியேற்றத்துடன் தொடங்குகிறது. இத்திருவிழா டிசம்பர் 3ஆம் தேதி வரை கொண்டாடப்படுகிறது. இக்காலக்கட்டங்களில் அலங்கரிக்கப்பட்டத் தேரில் புனித சவேரியார் நகரை வலம் வருவார்.

இங்கு, 1876ஆம் ஆண்டு முதலான பிறப்பு, இறப்பு, ஞானஸ்தானம், திருமணம் போன்ற சடங்குகள் தொடர்பான ஆவணங்கள் இன்றளவும் பாதுகாக்கப்பட்டு வருவது சிறப்பிற்குரியது. 2010வாக்கில் புனித சவேரியார் ஆலயத்திற்கு நான் சென்றபோது,

பங்கு தந்தையாக இருந்த கே.பால்தெலாமூர் அவர்கள், தன் வயதான காலத்திலும், பழமையான ஆவணங்களை எனக்கு காண்பித்ததோடு, அவற்றை புகைப்படம் எடுக்கவும் அனுமதி அளித்தார்.

சென்னை சாந்தோமில் இருந்து அனுப்பப்பட்ட
திருமண விக்ஞன அறிவிக்கை. (1890)

Dioecesis Sancti Thomae de Meliapor (India Britanica).

fb.com/ko.senguttuvan

இந்நேரத்தில் அவருக்கும் ஆலயத்திற்கும் என் நன்றிகள் உரித்தாவதாக...!

---

திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

**14.**

## விழுப்புரத்தில் எட்வர்டு நினைவுப் பூங்கா

-- கோ. செங்குட்டுவன்.




'Prince of wales' என்று அழைக்கப்படுபவர் இங்கிலாந்தின் இளவரசர் (ஏழாவது) எட்வர்டு ஆவார். 1906இல் இந்தியா வந்த இவரை 'வருக செல்வ! வாழ்க மன்னீயே' என சுதேசமித்திரனில் வரவேற்றார் மகாகவி பாரதி.

இங்கிலாந்து இளவரசரின் நினைவாக மெல்போர்ன் நகரில் 'குயின் விக்டோரியா கார்டன்' எனும் இடத்தில் சிலையும், லிஸ்பனில் 'பப்ளிக் பார்க்'கும் அமைக்கப் பட்டுள்ளன.

ஏழாவது எட்வர்டுக்கு விழுப்புரத்திலும் ஓர் நினைவுச் சின்னம் இருக்கிறது. ஆச்சரியமாக இருக்கிறதா? உண்மைதான்.

விழுப்புரம் ஜனசகாய பண்டில் (நிதி நிறுவனத்தில்) 1930களில், 'ஏழாவது எட்வர்டு மெமோரியல் நிதி' எனும் கணக்கு, விழுப்புரம் நகராட்சி நிர்வாகத்தின் சார்பில் தொடங்கப்பட்டிருந்தது. இதன் மூலம் சேர்க்கப்பட்ட ரூ.4ஆயிரத்து 145இல் இலவச ஆஸ்பத்திரி கட்டுவது பற்றி நகரமன்ற உறுப்பினர்கள் அபிப்ராயம் தெரிவிக்க வேண்டும் என்று மெமோரியல் கமிட்டி சார்பில் 14.02.1932இல் தீர்மானம் போடப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின் மூலம் இலவசஆஸ்பத்திரி எதுவும் கட்டப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் நகராட்சிப் பூங்காவுக்கு 'ஏழாவது எட்வர்டு மெமோரியல் பார்க்' எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது.




17.05.1947 அன்று நடந்த விழாவில் அப்போதைய சென்னை மாகாண வேளாண்துறை அமைச்சர் மாதவமேனன், புதிய பூங்காவுக்கு மேற்கண்ட பெயர் சூட்டி அடிக்கல் நாட்டினார்.



11.03.1951இல் உள்ளூர் நிர்வாகம் மற்றும் கூட்டுறவுத் துறை அமைச்சர் சந்திர மௌலி பூங்காவை திறந்து வைத்தார்.




அப்போது இதன் பெயர் 'முனிசிபல் பார்க்' என்பதாக மாற்றப்பட்டிருந்தது.

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

## 15.

# விழுப்புரத்தில் பாரதியின் மகளார் தங்கம்மாள் பாரதி

-- கோ. செங்குட்டுவன்.

**"காக்கைச் சிறகினிலே பாரதி - நின்றன்**
**சிவந்த நிறம் தோன்றுதையே பாரதி!**
**பார்க்கு மரங்களெல்லாம் பாரதி - நின்றன்**
**நேர் கொண்ட பார்வை தோன்றுதையே பாரதி!**
**கேட்கு மொலியிலெல்லாம் பாரதி - நின்றன்**
**கீத மிசைக்குதடா பாரதி!**
**தீக்குள் விரலை வைத்தால் பாரதி - நின்னைத்**
**தீண்டுமின்பந் தோன்றுதடா பாரதி."**

பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் நெருக்கடி, நண்பர்களின் ஆலோசனையின்படி 1908இல் பாண்டிச்சேரி சென்றடைந்தார் பாரதி. அதிலிருந்து விழுப்புரத்துடனும் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது.பாரதியின் "பாஞ்சாலி சபதத்"தின் சில பகுதிகள் விழுப்புரம் இரயில் நிலையம் அருகில் இயங்கி வந்த சரஸ்வதி பிரசில் அச்சிடப்பட்டன.

நினைவில் வாழும் பாரதி ஆய்வாளர் திரு.ரா.அ.பத்மநாபன் அவர்களை 19.08.2010 அன்று, சென்னை பெசன்ட் நகரிலுள்ள அவரது இல்லத்தில் நான் சந்தித்தபோது, மேற்காணும் தகவலை அவர் உறுதி செய்தார்.

1917இல் பாரதியார் தன் குடும்பத்தினருடன் புகைப்படம் எடுத்துக் கொண்டார். இப்புகைப்படத்தை எடுத்தக் கலைஞர் சி.கிருஷ்ண ராஜு. இவர் விழுப்புரத்தைச் சேர்ந்தவர் என்பது பெருமைக்கும் மகிழ்ச்சிக்கும் உரியது.

சுதேசிப் பத்திரிகைகள் பிரிட்டிஷ் இந்தியாவில் தடை செய்யப்பட்டிருந்தன. இதனால், பாரதியின் இந்தியா மற்றும் சூரியோதயம், விஜயா உள்ளிட்டப் பத்திரிகைகள், பிரெஞ்சுப் பகுதியானப் பாண்டிச்சேரியில் இருந்து இரகசியமாக சென்னை மாகாணத்துக்குள் கொண்டு வரப்பட்டன. பாண்டிச்சேரியில் இருந்து இரகசியமாக இந்த இதழ்கள் சங்கர நாராயணன் (கடையநல்லூர்), நீலகண்ட பிரம்மச்சாரி

ஆகியோரால் இரயில் மூலம் விழுப்புரம் கொண்டு வரப்பட்டன. விழுப்புரம் வந்ததும் இருவரும் விடுதி ஒன்றில் தங்குவார்கள். பின்னர் உள்நாட்டு தபால் கவர்களில் போடப்பட்டு, சுதேசி அன்பர்களுக்கு அஞ்சல் செய்யப்பட்டது. இந்நிகழ்வு 1910ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இருந்து 1911ஆம் ஆண்டு ஜூன் மாதம் வரை தொடர்ந்தது.



பாரதி மறைவுக்குப் பின்னும் அவரதுக் குடும்பத்தினரின் தொடர்பு விழுப்புரம் மண்ணுடன் தொடர்ந்தது. 10.09.1952இல் விழுப்புரம் மகாத்மா காந்தி பாடசாலையில் பாரதி விழா நடந்தது. இதன் சிறப்பு அழைப்பாளர், பாரதியின் மகளார் தங்கம்மாள் பாரதி.




இவ்விழாவில், சிவாஜி பத்திரிகையின் ஆசிரியர் திருலோகம் சீதாராமன் உள்ளிட்டோர் பங்கேற்றனர். இந்த இடத்தில் நினைவில் வாழும் ரா.அ.பத்பநாபன் (ஆர்.ஏ.பி.) அவர்கள் குறித்துச் சொல்ல வேண்டும்.விழுப்புரம் இரயில் நிலையத்தையொட்டியுள்ள பஜனைக் கோயில் தெருவில் இவர் வசித்து வந்த வீடு, உலகம் முழுவதும் இருக்கும் பாரதி அன்பர்களுக்கு, ஆய்வாளர்களுக்கு பெரும் புதையலாக இருந்தது.பாரதி தொடர்பான அரிய சேகரிப்புகள் ஆர்.ஏ.பி. அவர்களின் ஈடுபாட்டினாலும் கடும் உழைப்பினாலும் இங்கு இடம்பெற்றிருந்தன. பாரதி நினைவுநாளில் இவரது நினைவையும் போற்றுவோம்.

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

## 16.

# உளுந்தூர்ப்பேட்டை விமான ஓடுதளம்

-- கோ. செங்குட்டுவன்.

மன்னார்குடி நகர், உளுந்தூர்ப்பேட்டையில் இருந்து 3ஆவது கி.மீ.இல் இருக்கும் சின்னஞ் சிறிய கிராமம். திருச்சி - சென்னை தேசிய நெடுஞ்சாலையில், உளுந்தூர்ப்பேட்டை டோல் கேட்டைக் கடக்கும் போது, கன நேரத்தில் இந்தக் கிராமத்தைக் கடந்து விடலாம். ஆனால், சற்று இறங்கி சாலையின் கிழக்கே உள்ள இந்த ஊருக்குள் நடந்துச் சென்றால் நீங்கள் திரும்புவதற்கு இரண்டு மணி நேரம்கூட ஆகலாம். இதற்குக் காரணம் இங்குள்ள விமான ஓடுதளம்.

1942இல் இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த சமயத்தில் இந்த ஓடுதளம் அமைக்கப்பட்டுள்ளது. அப்போது இங்கு போர் விமானங்கள் ஓயாமல் வந்துச் செல்லுமாம். மேற்கில் உள்ள ஓடுதளப் பாதையில் ஜெ 1, 2 என 50 வரை எண்கள் வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஜெட் விமானங்கள் வந்து நிற்பதற்கான அடையாளங்களாக இருக்கக்கூடும்.



இந்த ஓடுதளம் கிழக்கில் பச்சவெளி, மேற்கில் மன்னார்குடி, வடக்கில் நயினார்க் குப்பம், தெற்கில் மாம்பாக்கம் ஆகிய கிராமங்களைத் தொட்டு நிற்கின்றன. நான்கும் ஒரு புள்ளியில் இணைகின்றன.  ஒவ்வொரு திசையிலும் சுமார் ஒரு கி.மீ.க்கும் குறையாமல் இவற்றின் நீளம் இருக்கிறது. அகன்றப் பரப்பில் ஏற்ற இறக்கங்களுடன் ஓடுதளங்கள் அமைக்கப்பட்டுள்ளன.




இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், 1954இல் சென்னையில் இருந்து விமானம் மூலம் இங்கு வந்த இந்தியப் பிரதமர் நேரு அவர்கள், இங்கிருந்து நெய்வேலி சென்றிருக்கிறார். தொடர்ந்து, 1961இல் சோவியத் அதிபர் லியோனித் பிரஷ்னெவ் அவர்களும் இந்த விமானத் தளத்திற்கு வந்துள்ளார். மேலும், 1966 நவம்பர் மற்றும் 1967 மார்ச் மாதங்களில் இங்கு விமானங்கள் வந்துச் சென்றதாக, தனது “கெடிலக் கரை நாகரிகம்” நூலில் பதிவு செய்துள்ளார், திரு.சுந்தர சண்முகனார்.

நகர் மன்னார்குடி உள்ளிட்டக் கிராமங்களை விமான ஓடுதளம் இணைப்பதால், அருகில் உள்ள நகரமான உளுந்தூர்ப்பேட்டையின் பெயராலேயே "உளுந்தூர்ப்பேட்டை விமான ஓடுதளம்" என்றழைக்கப்படுகிறது.




கடந்த 1.10.2013இல் நகர் (மன்னார்குடி) கிராமத்துக்கு நான் சென்றிருந்தேன். அப்போது வீட்டுக்கு வெளியே குளித்துக் கொண்டிருந்த ஒருவர் "எங்கப் போறீங்க?" என விசாரித்தார். "பழைய ஏர்போட்டுக்கு" (இப்படிச் சொன்னால்தான் அவர்களுக்குப் புரியும்) என பதிலளித்தேன்.

"ஏன் ஜெட் வருதுங்களா?" அவரது அடுத்தக் கேள்வியில் ஆர்வம் தெறித்தது. இதே கேள்வியைத் தான் பலரும் என்னிடம் கேட்டனர். அவர்களில் பலர் ஜெட்டைப் பார்த்தது கிடையாது. ஆனால், ஜெட் எப்போது வந்திறங்கும் எனும் எதிர்பார்ப்பு அவர்கள் கண்களில் தெரிந்தது.

தற்போது இந்த விமான ஓடுதளம், இப்பகுதி மக்களால் கம்பு, கேழ்வரகு உள்ளிட்டத் தானியங்களை உலர வைக்கும் களமாகவும், சுற்றுவட்டப் பகுதிகளில் இருந்து உளுந்தூர்ப்பேட்டைச் செல்ல குறுக்குவழிச் சாலைகளாகவும் பயன்படுத்தப்பட்டு வருகிறது. சுட்டெரிக்கும் வெயிலில் ஓடுதளப் பாதைகளைச் சுற்றி வந்து

கொண்டிந்தபோது, பல இடங்களில் கீரிப் பிள்ளைகள் குறுக்கும் நெடுக்குமாக ஓடித்திரிவதைப் பார்க்க முடிந்தது.




ஒரு காலத்தில் போர் விமானங்கள் சீறிப் பாய்ந்தன. இப்போது கீரிப் பிள்ளைகள் விளையாடித் திரிகின்றன. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு அமைதியாக இருக்கிறது, உளுந்தூர்ப்பேட்டை விமான ஓடுதளம்.

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

17.

# ஒருங்கிணைந்த சென்னை மாகாணத்தின் முதல் முதலமைச்சர்: ஓமந்தூரார் (1947-1949)

-- கோ. செங்குட்டுவன்.




ஓமாந்தூர் ...

திண்டிவனம் - புதுவை சாலையில் 13ஆவது கி.மீ.இல் அமைந்துள்ள இவ்வூர் தமிழக அரசியல் வரலாற்றில் பிரிக்கவொண்ணா ஓர் ஊராகும்.

ஆம், சுதந்திர இந்தியாவில் சென்னை கோட்டையில் இந்திய தேசியக் கொடியை ஏற்றி வைத்த முதல் முதல்வர்-ஓமந்தூரார் என்றும், ஓ.பி.ஆர் என்றும் மக்களால் அன்புடன் அழைக்கப்படும், ஓமாந்தூர் பி.இராமசாமி ரெட்டியாரின் பிறப்பிடம் இதுதான்.

சாதாரண விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர் ஓமந்தூரார்.

1912 முதலே இந்திய விடுதலைப் போராட்டத்தில் அவர் ஈடுபட்டார். 1930இல் தென்னார்க்காடு மாவட்ட காங்கிரஸ் தலைவரான ஓமந்தூரார். விழுப்புரம் அருகே சிறுவந்தாடு கிராமத்தில் காந்தி ஆசிரமம் ஒன்றைத் தொடங்கி நடத்தி வந்தார்.

ஆங்கிலேய அரசின் தடைகளை மீறி தென்னார்க்காடு மாவட்டத்தில் பல்வேறு இடங்களில் காங்கிரஸ் மாநாடுகளை நடத்தினார். இம்மாநாடுகளில் பண்டித அசலாம்பிகை அம்மையார், பாபு ராஜேந்திர பிரசாத், தி ஹிந்து ரங்கசாமி ஐயங்கார், காஞ்சிபுரம் கிருஷ்ணசாமி சர்மா உள்ளிட்டத் தலைவர்கள் பங்கேற்றனர்.

1930இல் வேதாரண்யத்தில் நடந்த உப்பு சத்தியாகிரகத்துக்கு தொண்டர்களை அனுப்பியக் குற்றத்திற்காக கைது செய்யப்பட்டு 6 மாத சிறை தண்டனை விதிக்கப் பெற்றார். இதுபோல் பலமுறை சிறைவாசத்தை அனுபவித்தார் ஓமந்தூரார்.

1938இல் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தலைவர் பொறுப்பை ஏற்றார்.

23.3.1947 முதல் 6.4.1949 வரை ஓமந்தூரார் சென்னை மாகாணத்தின் முதல்வராக இருந்தார்.

இவரது ஆட்சியின்போது மடங்கள், ஆதீனங்கள், கோயில்களின் சொத்துக்களை முறைப்படுத்தும் சட்டம், ஜமீன்தாரி இனாம் ஒழிப்புமுறை, கோயில்களில் தேவதாசி முறை ஒழிப்பு, கல்வி வேலைவாய்ப்புகளில் இடஒதுக்கீடு மற்றும் பூரண மதுவிலக்கு ஆகிய திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டன.

மேலும், சென்னை மாகாண அரசின் சின்னமாக திருவில்லிப்புத்தூர் கோபுரம் அறிவிக்கப்பட்டது. இந்திய மருத்துவம் வளர உரிய ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன.

கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. தமிழ் வளர்ச்சிக் கழகம் உருவாக்கப்பட்டது. பாரதியார் பாடல்கள் நாட்டுடைமையாக்கப்பட்டன.தேசிய கவி இராமலிங்கம் பிள்ளை அரசவைக் கவிஞராக நியமிக்கப்பட்டார்.

காந்தியம் மற்றும் வடலூர் வள்ளலாரின் கொள்கைகளில் பெரும் ஈடுபாடு கொண்டவர் ஓமந்தூரார்.

விழுப்புரம் மாவட்டம் மழவந்தாங்களில் கஸ்தூரிபா தொழு நோய் நிவாரண நிலையத்தைத் தொடங்கிய இவர், வடலூரில் வள்ளலார் குருகுல உயர்நிலைப் பள்ளியையும் தொடங்கினார்.

1.2.1895இல் பிறந்த இவர் 25.8.1970இல் காலமானார்.

சென்னையிலுள்ள அரசினர் தோட்டத்துக்கு ஓமந்தூரார் அரசினர்த் தோட்டம் எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. இவரது நினைவைப் போற்றும் வகையில் மத்திய அரசு தபால் தலை ஒன்றையும் வெளியிட்டுள்ளது.

2000ஆம் ஆண்டின் இறுதியில் ஓமந்தூர் கிராமத்துக்கு நான் சென்றிருந்தேன். முன்னாள் முதல்வர் ஒருவர் வாழ்ந்ததற்கான எந்தச் சுவடும் அங்கில்லை. கற்குவியல் ஒன்றைக் காட்டி, இங்குதான் அவர் வீடு இருந்தது என்றனர்.

இதனைத் தொடர்ந்து 9.11.2000 தேதியிட்ட குமுதம் இதழில், ‘முதல்’வரின் கிராமத்துக்கு முகவரி கொடுங்கள் எனும் தலைப்பிலான, என்னுடையக் கட்டுரை ஸ்பெஷல் ரிப்போர்ட்டாக பிரசுரமானது.

(அக்கட்டுரை உங்களின் பார்வைக்கு இணைக்கப்பட்டுள்ளது. (நன்றி: குமுதம்)

நதிகளை இணைப்பது குறித்து இன்று பேசாதவர்கள் இல்லை. ஆனால் 1947-49 லேயே கிருஷ்ணா நதியையும் பெண்ணையாற்றையும் இணைப்பதன் மூலம் தென்னாற்காடு மாவட்டத்தின் குடிநீர்ப் பிரசினையை நிரந்தரமாக நீக்கலாம் என்று திட்டம் தீட்டியவர் தமிழகத்தின் முதல் முதலமைச்சர் ஓமாந்தூர் ராமசாமி ரெட்டியார். அவரது சொந்த கிராமமான ஓமாந்தூரே இன்று குடிநீர்ப் பிரசினையில் தவித்துத் தத்தளிக்கிறது என்று கேள்விப்பட்டு, அங்கு சென்றோம்.


ஓமாந்தூர் ராமசாமி ரெட்டியார்

குடிநீர்ப் பிரசினை மட்டுமா? ஒரு முன்னாள் முதல்வர் - தமிழகத்தின் முதல் முதலமைச்சரின் கிராமம் என்பதற்கான சிறு அறிகுறியும் இல்லாமல் 'வளர்ச்சி' என்ற சொல்லை அகராதியில்

# 'முதல்வரின் கிராமத்துக்கு முகவரி கொடுங்கள்!


முதல்வரின் வீடு இருந்த இடம்

மட்டுமே அறிந்து, 'வறட்சி'யை மட்டுமே நிதர்சனமாக உணர்ந்து, வாடிக் கிடக்கிறது ஓமாந்தூர்.

திண்டிவனத்திலிருந்து பதினோரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது ஓமாந்தூர் கிராமம். இங்குள்ள திண்ணைப் பள்ளியில் படித்து, படிப்படியாக முன்னேறி, அரசியலில் ஈடுபட்டு, த.நா. காங்கிரஸ் கமிட்டி தலைவரானவர் ராமசாமி ரெட்டியார். பிறகு சுதந்தர


ஓமாந்தூர் கிராமம்

இந்தியாவின் முதல் முதலமைச்சர்களுள் ஒருவராகத் தமிழகத்தை இரு வருடங்கள் ஆண்டார்.

"தனக்குன்னு அவர் எதையுமே செய்துக் காதவருங்க. அவர் முதலமைச்சரா இருந்த போது ஓமாந்தூருக்கு ஒரு பள்ளிக்கூடம் வேணும்னு ரொம்ப வற்புறுத்திக் கேட்டிருக்கேன். 'சி.எம்., சொந்த ஊருக்கு மட்டும் செய்துட்டாருங்கற பேச்சு வந்துடக்கூடாது. பிறகு பார்க்கலாம்'னு சொல்லிட்டாரு.

அப்படிப்பட்டவருக்கு ஒரு மணி மண்டபம் கட்டக்கூட இங்க ஆள் இல்லீங்க. அட, மணி மண்டபம் கெடக்குது; அவர் வாழ்ந்த வீட்டைப் பார்த்தா நீங்க என்ன சொல்லுவீங்களோ?" என்று ஆற்றமாட்டாமல் புலம்பினார் கிராமத்துக்காரரர் சாமிக்கண்ணு. இவர் ஓமாந்தூராரின் நண்பர்.

ஓமாந்தூரார் வாழ்ந்த இடத்துக்குச் சென்றோம். ஒரு காலத்தில் அது ஒரு வீடாக இருந்திருக்க வேண்டும். இப்போது சிறு சுவடுகூட இல்லாமல் வெறும் கற்குவியலாகக் காட்சியளிக்கிறது.

"தன்னலமில்லாத ஒரு தலைவர் இங்கேயும் வாழ்ந்திருக்கார்னு அடுத்தத் தலைமுறைக்கு எடுத்துக் காட்டவாவது நம்ம அரசாங்கங்கள் ஏதாவது செய்திருக்கலாம்" என்கின்றனர் ஓமாந்தூர்க்காரரர்கள்.

ஓமாந்தூரின் இன்றைய மிக முக்கியப் பிரசினை—குடிநீர். ஊருக்கு இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஆற்றிலிருந்து பைப் லைன் மூலம் தண்ணீர் வர ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆனால், பைப் லைனில் ஏகப்பட்ட ஓட்டைகள். பல காலமாக இந்த ஓட்டைகள் சீராக்கப்படாததால் ஊருக்கு வருவதற்குள் பெரும்பாலான நீர் வீணாகிப் போகிறது. மூன்று நாட்களுக்கு ஒருமுறைதான் நீர் கிடைக்கிறது என்கிறார்கள் மக்கள். மழைக்காலத்தில் கூடக் குடிநீர்த் தட்டுப்பாடு உண்டு என்பதுதான் இங்கே பெரிய சோகம்.

திறக்கப்படாத ஆரம்ப சுகாதார நிலையம், சிதிலமடைந்த நிலையிலுள்ள ஒரு ஒன்பதாம் நூற்றாண்டு ஆலயம், இன்னும் கனவாகவே உள்ள மேல்நிலைப்பள்ளி என்று பிரசினைகளை அடுக்கிக் கொண்டே போகிறார்கள்.

வீரப்பன் விவகாரம் முடிந்த பிறகாவது பதில் சொல்ல வேண்டியவர் பதில் சொன்னால் நல்லது!

-கோ. செங்குட்டுவன்/
பாரா

படங்கள்: வாசு.

மழை...



அவ்வப்போது
பூமியை நிராகரிக்கும் மழை
ஒருபோதும் மழையை
நிராகரித்ததில்லை பூமி




கடந்த 2013 பிப்ரவரியில் ஓமாந்தூர் கிராமத்தில், முன்னாள் முதல்வர் ஓ.பி.ஆருக்கு அழகிய மணிமண்டபம் திறக்கப்பட்டது.

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

**18.**

# அழிந்தது யானை மரம்!

-- கோ. செங்குட்டுவன்.

**யானை மரம்...**

விழுப்புரம் வடக்கு இரயில்வே காலனி பகுதிக்குச் செல்பவர்களின் கண்களில் இருந்து இந்த மரம் தப்பியிருக்கவே முடியாது.

அவ்வளவு பிரம்மாண்டமாக, பரந்து விரிந்தக் கிளைகளுடன், இரயில்வே இருபாலர் பள்ளியின் பின்புறம் காட்சியளித்து வந்தது இந்த மரம்.

இம்மரத்தைக் கற்பக விருட்சம் என்பர். "ஐந்தருக்களில் ஒன்று. தேவர்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியது.

இது விருஷவுருப் போன்றது" என கற்பக விருட்சத்திற்கு விளக்கம் கொடுக்கிறது அபிதான சிந்தாமணி.

அட, நம்ம ஊரிலும் கற்பக விருட்சமா? என ஆவலோடு எத்தனைப் பேர் இந்த மரத்தைப் பார்த்திருக்கிறார்கள் என்று தெரியாது. ஆனால் வடஇந்தியாவில் இருந்து இந்த வழியாக இரயிலில் வந்த சாதுக்கள் சிலர், இந்த மரத்தின் கீழ் சில மணி நேரம் தியானித்துவிட்டுச் சென்றிருக்கிறார்கள்.

இந்த மரத்தின் அடித்தோற்றம் யானையின் வடிவத்தைக் கொண்டிருந்ததால் இதற்கு 'யானை மரம்' என்றும் பெயர்.

இதுகுறித்து மிகவும் ஆய்வு செய்த விழுப்புரம் தாவரவியல் பேராசிரியர் (ஓய்வு) திரு. பீம.தனஞ்செயன்,




“பாம்பகேஸி எனும் தாவரக் குடும்பத்தைச் சேர்ந்த இம்மரத்திற்கு ‘ஆடன் சோனியா டிஜிட்டோ’ எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. இதன் பிறப்பிடம் ஆப்ரிக்கா. பண்டைய காலத்தில் மனிதர்களுக்கு வீடாகவும், அவர்கள் உடுத்தும் ஆடையாகவும், உணவாகவும் பயன்பட்டது” என விளக்கமளித்திருந்தார்.

இந்த விவரம் அடங்கியப் பலகை மரத்திற்கு அருகில் நடப்பட்டும் இருந்தது. மாணவர்களும் மற்றவர்களும் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக.

கடந்த 2010ஆம் ஆண்டில் யானை மரத்தைப் படம்பிடித்த நான், அழிந்து கொண்டிருக்கும் இந்த அரிய தாவர இனத்தை பாதுகாக்க தாவரவியலாளர்கள் முன்வர வேண்டும் என கோரிக்கை விடுத்திருந்தேன். 2011இல் ஏற்பட்ட தானே புயலில் பிரம்மாண்ட இம்மரத்தின் கிளையொன்று முறிந்தது. பின்னர் படிப்படியாக தன் சுயத்தை இழந்து கொண்டே வந்தது யானை மரம்.

நேற்று காலை இரயில்வே குவார்ட்டர்சுக்கு சென்ற நான், யானை மரம் இப்போது எப்படி இருக்கிறது என பள்ளியின் காம்பவுண்டு சுவர் வழியாக எட்டிப் பார்த்தேன்.




**அய்யோ...!**

---



திரு. கோ. செங்குட்டுவன்
ko.senguttuvan@gmail.com

---

19.

## அன்பின் வெற்றி

--செல்வன்.

ரவாண்டா...மத்திய ஆப்பிரிக்காவில் உள்ள குட்டி தேசம். ஜனதொகை 1 கோடி மட்டுமே.

இந்த குட்டி நாட்டில் 20 ஆண்டுகளுக்கு முன்பு நடந்த இனப்படுகொலைகளால் இந்த நாட்டை இன்று இந்த இனப்படுகொலை மூலமாகவே உலக மக்கள் அறியும் நிலை உள்ளது. இதன் பின்புலம் என்னவென பார்த்தால் வரலாற்றில் இருந்து மக்கள் எதையும் கற்றுகொள்வதில்லை என்பதை நிருபிக்கும் வகையிலான வந்தேறி/மண்ணின் மைந்தன் அரசியலும், வெள்ளை இனவாதமும், காலனிய மேலாதிக்கமுமே காரணிகளாக உள்ளன.

ரவாண்டாவில் ஹுட்டு, டுட்ஸி என இரு இனங்கள் உண்டு. ஹூட்டு ஜனதொகையில் 84%, டுட்ஸி 15%. ஹூட்டு விவசாயம் செய்யும் மக்கள். டுட்ஸி மக்கள் மேட்டுகுடியினர். வரலாற்று காலம் முழுக்க்க ஜனதொகையில் குறைவாக இருப்பினும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக ரவாண்டாவை டுட்ஸி மன்னர்களே ஆண்டுவந்தார்கள். தளபதிகள், அமைச்சர்கள் எல்லாருமே டுட்ஸிகள்.

மற்றபடி ஹுட்டு, டுட்ஸி என்பது ரவான்டாவில் காலனி ஆதிக்கம் ஏற்படுமுன் நெகிழ்ச்சிதன்மை கொண்ட பிரிவுகளாகவே இருந்து வந்தன. இனக்கலப்பும், திருமணங்களும் நடந்தன. டுட்ஸி என்பது இனமல்ல, ஒரு பட்டம், பசுக்களை அதிகமாக வைத்திருப்பவரை டுட்ஸி என கவுரவமாக அழைத்து வந்தார்களே ஒழிய டுட்ஸி என்பது இனமல்ல என்ற கருத்தும் உண்டு.

ஆனால் ரவாண்டாவில் பெல்ஜியத்தின் காலனி ஆட்சி ஏற்பட்டவுடன் டுட்ஸிகள், ஹூட்டு என்ற இனபாகுபாட்டை பிரித்தாளும் கொள்கைக்கைப்படி வலுப்படுத்தினார்கள். ஆப்பிரிக்கர்கள் படிப்பறிவற்றவர்கள், முட்டாள்கள் என்ற மேற்கத்திய கண்ணோட்டத்தை பொய்ப்பிக்கும் விதமாக டுட்ஸிக்கள் நல்ல படிப்பறிவுடனும், வெள்ளையர்களுக்கு சளைக்காத அறிவுடனும் இருந்தார்கள். அதனால் அதிர்ச்சியடைந்த பெல்ஜியம் அவர்களை கட்டுக்குள் வைக்க அவர்களுக்கு

அரசு வேலைகள், உயர்பதவிகளை கொடுத்தது. ஹூட்டுக்களை கட்டுக்குள் வைக்க டுட்ஸிகளின் நிலமும் கையகபடுத்தபட்டு ஹூட்டுக்களுக்கு மறுவினியோகம் செய்யபட்டது.

இப்படி ஒரு இனத்தை காட்டி இன்னொரு இனத்தை அடக்கி வைத்த காலனி ஆட்சி முடிவுக்கு வந்தது 1959ல். அதன்பின் ஆட்சியை மீண்டும் பிடித்த டுட்ஸிகள் தேர்தலை நடத்தாமல் காலனி ஆதிக்கத்துக்கு முந்தைய பாணியில் ஆட்சியை நடத்த முயன்றார்கள். ஆனால் ஹூட்டுக்கள் விழித்தெழுந்து போராட ஆரம்பிக்க முதல் முறையாக ஜனநாயக தேர்தல் நடந்து முதல் முதலாக ஹபைரிய்மானா எனும் ஹூட்டு அதிபராக தேர்ந்தெடுக்கபட்டார்.

ஆனால் அதிபர் 1994ல் விமானத்தில் பறக்கையில் சுட்டு வீழ்த்தபட்டு கொல்லபட்டார். அதன்பின் டுட்ஸிகளுக்கு எதிரான அந்த மிகப்பெரும் இனப்படுகொலை கட்டவிழ்த்து விடபட்டது.

இனப்படுகொலை நடந்தது தற்செயல் அல்ல. அதிபர் இறந்ததற்கு எதிர்வினையும் அல்ல. ஆயிரமாயிரம் ஆண்டுகளாக ஒடுக்கி வைத்திருந்த டுட்ஸிகளை நிரந்தரமாக ஒருவர் விடாமல் அழிப்பதே ஹூட்டுக்களின் பிரச்சனைக்கு தீர்வு என்ற வாதத்தை ஹூட்டுக்களின் கட்சிகள் பல முன்வைத்து வந்தன "ஹூட்டு பவர்" எனும் சித்தாந்தம் முன்னெடுக்கபட்டு கட்சியாக மாறியது. 1990களில் இருந்தே ஹூட்டு மக்களுக்கு ராணுவம் கத்திகளை வழங்க துவங்கியது. ரவாண்டா ராணுவம் மிகப்பெரும் அளவில் கையெறி குன்டுகள், துப்பாக்கிகளை வாங்கியது. டுட்ஸிகள் மற்றும் டுட்ஸிகள் மேல் அனுதாபத்துடன் இருந்த ஹூட்டு மிதவாதிகள் பலரது பெயர் ஹூட்டு பவர் இயக்கத்தின் கொலைப்பட்டியலில் இருந்தது.

வேடிக்கையிலும் வேடிக்கையாக விமான விபத்தில் இறந்த ஹூட்டு ஜனாதிபதியின் பெயரும் ஹூட்டு பவர் இயக்கத்தின் கொலைபட்டியலில் இருந்தது. அவர் மிதவாதி. ஆனால் அவர் பறக்கும் விமானத்தை யாரோ சுட்டு வீழ்த்தியதும் (சுட்டது யாரென்று இதுவரை தெரியாது) அப்பழியை டுட்ஸிக்கள் மேல் திருப்பிவிட்டு மிகப்பெரும் இனப்படுகொலை கட்டவிழ்த்து விடபட்டது.

ஹூட்டு ராணுவம், போலிஸ், அரசியல் தலைவர்கள் எல்லாரும் களத்தில் இறங்கி "டுட்ஸி இனத்தில் சின்ன குழந்தைகளை கூட விடாமல்  கொல்லுங்கள்" என உத்தரவு பிறப்பித்தார்கள். தலைவர்கள் உத்தரவுக்கு கட்டுபட்டே பழகிய ஹூட்டுக்கள்

கொலைகளில் இறங்கினார்கள். இரண்டு மாதங்களில் சுமார் எட்டு லட்சம் டுட்ஸிகள் கொல்லபட்டார்கள். தெருக்களில் சோதனை சாவடிகளை நிறுவி அடையாள அட்டைகளில் உள்ல ஜாதியை பார்த்து டுட்ஸிக்களை கொன்றார்கள்.

டுட்ஸி பெண்கள் மேல் பலாத்காரம் கட்டவிழ்த்து விடபட்டது. ஆப்பிரிக்க நாடுகளில் எய்ட்ஸ் அதிகம். மருத்துவமனைகளில் எய்ட்ஸ் வார்டுகளில் இருந்த நோயாளிகளை பிடித்து வந்து டுட்ஸி பெண்களை பலாத்காரம் செய்ய வைத்து அவர்களுக்கு எய்ட்ஸ் நோயை பரப்பினார்கள்.

இத்தனை கொலைகள் நடக்கையில் சர்வதேச சமூகம் அறிக்கைகள் விட்டுவிட்டு அமைதியாக இருந்ததே ஒழிய ஒருவரும் சுட்டுவிரலையும் அசைக்கவில்லை. மொத்தம் 15 லட்சம் டுட்ஸிகள் ரவாண்டாவில் இருந்தார்கள். அவர்களில் 12 லட்சம் பேர் கொல்லபட்டார்கள். 3 லட்சம் பேர் தப்பிபிழைத்து அண்டைநாடுகளுக்கு ஓடினார்கள். லட்சகணக்கில் டுட்ஸி பெண்கள் எய்ட்ஸ் நோயாளிகளாக இன்னமும் வாழ்கிறார்கள்.

அண்டைநாடுகளில் இருந்த டுட்ஸிக்கள் படை ஒன்றை திரட்டி வந்து ஹூட்டுக்களை தோற்கடித்து ஆட்சியை பிடிக்கும்வரை படுகொலைகள் தொடர்ந்தன. டுட்ஸிகளின் புரட்சிப்படையான ரவாண்டா தேசபக்தி படை படுகொலைகளை நிறுத்தி ஆட்சியை பிடித்தது. அதன் தலைவர் பால் ககாமே இந்த இனபடுகொலையை நிறுத்தியவராக டுட்ஸிக்களால் போற்றபடுகிறார். அதன்பின் ரவாண்டாவின் ஒரு இஞ்சு நிலம் விடாமல் அனைத்தையும் புரட்சிப்படை பிடித்தது. **பால் ககாமே** அதிபராக பதவி ஏற்றார். இன்றும் ரவாண்டாவில் அவரது ஆட்சிதான்.



ஆனால் பழியுணர்வுடன் செயல்படாமல் நாட்டுக்கு புதிய அரசியல் சட்டத்தை ஏற்படுத்தி, ரவாண்டாவை அமைதிபாதைக்கு திருப்பினார். 1994 முதல் 2000 வரை ரவாண்டாவில் ராணுவ ஆட்சியே இருந்தது. இந்த காலகட்டத்தில் பழிக்கு பழி என நினைக்காது ஹூட்டுக்களுடன் சமாதானம் செய்துகொள்ள பால் ககாமே முன்வந்தார். நாட்டில் அமைதி திரும்பியது. அதன்பின் நடந்த தேர்தல்களில் ஹூட்டு, டுட்ஸி இரு தரப்பின் ஆதரவையும் பெற்று பெருவாரியாக வென்றார் ககாமே.

அவ்விதத்தில் பால் ககாமே நெல்சன் மண்டேலாவுக்கு ஒப்பானவராக கருதபடுகிறார். மிகபெரும் இன ஒதுக்கல், சிறைதண்டனைக்கு பின்னர் ஆட்சியை பிடித்த மண்டேலா வெள்ளையரை பழிவாங்க முனையவில்லை. அரவணைத்தே ஆட்சியை நடத்தினார். பால் ககாமேயும் அதுபோலவே ஹூட்டுக்களை பழிவாங்காது அரவணைத்து சமாதானத்தை ஏற்படுத்தியதால் ரவாண்டாவில் ஓடிய ரத்த ஆறு ஓய்ந்து அமைதி திரும்பியுள்ளது.

---



செல்வன்
holyape@gmail.com

---

## 20.

# சீன உணவகங்களின் வரலாறு

-- செல்வன்.

அமெரிக்காவில் உள்ள சீன உணவகங்களின் வரலாறு குறித்த டாக்குமெண்டரி பார்த்தேன். சீன- அமெரிக்கர்கள் வாழ்க்கையை போலவே அதுவும் இங்கே பல போராட்டங்களை சந்தித்துள்ளது.

1850ல் கலிபோர்னியாவில் தங்கம் கிடைக்கும் என்ற ஆசையில் அங்கே மக்கள் குடியேறினார்கள். இதே சமயம் சீனர்கள் கூலி வேலைக்கு அமெரிக்காவுக்கு பெருமளவில் வந்தார்கள். 1850 சமயம் கலிபோர்னியா, சான்பிரான்ஸிஸ்கோ நகரில் சீன குடியேற்றம் நிகழ்ந்தது.

ஆனால் சீனர்கள் மேல் இனவெறுப்பு காட்டபட்டு வேலைகள் மறுக்கபட்டன. வீடுகள் வாடகைக்கு கொடுக்கப்படவில்லை வேலை கிடைக்காது. இதனால் சைனாடவுன்களை உருவாக்கி அங்கே குடியேறினார்கள். வேலை கிடைக்காததால் சுயதொழில் செய்ய ஆரம்பித்தார்கள். லாண்டரி, உணவகம் ஆகிய இரு தொழில்களையும் இப்படி துவக்கினார்கள்.

சாப் ஸூயி என்பது இக்காலக்ட்டத்தில் உருவான சீன அமெரிக்க உணவு. அமெரிக்கர்களுக்கு ஏற்ற விதத்தில் இருக்கவேண்டும் என்பதற்காக உருவாக்காப்ட்டது சாப் சூயி. பன்றி, மாடு, சிக்கன் இறைச்சியை வாணலியில் போட்டு, சுவை இல்லாத பிளான்ட் ஆன மூங்கில் கொழுந்து மாதிரி காய்களைபோட்டு, சீன சாஸ் ஊற்றி வணக்கினால் சாப் ஸூயி ரெடி.

1950களில் மிசவுரி மாநிலம், ஸ்ப்ரிங்பீல்ட் நகரில் கேஷ்யு சிக்கன் ரெசிபி உருவானது. அந்நகர மக்கள் சீனர்கள் தம் ஊருக்கு வந்து உணவகம் திறப்பதை விரும்பவில்லை. முதல்நாளே கடைமுன் "சீனனே வெளியேறு" என கோஷம். கடைக்கு குண்டும் வைக்கபட்டது. அதன்பின் மிகுந்த போராட்டத்துக்கு பின் உணவகம் திறக்கபட்டது. மிசவுரி மக்களுக்கு பிடித்த வகையில் இருக்கவேண்டும் என்பதற்காக காஷ்யு சிக்கன் ரெசிபி உருவாக்கபட்டது. மிசவுரியில் எண்ணெயில் பொறித்த சிக்கன் பிரபலம். அதனால் சிக்கனை எண்ணெயில் போட்டு, சாஸ் ஊற்றி மேலே சில முந்திரிகளை போடால் காஷ்யு சிக்கன் ரெடி.

சாஸில் சர்க்கரையும், தேனும் கலக்கப்பட்டதால் அதன் இனிப்பு சுவை மக்களுக்கு மிகபிடித்துபோய்விட்டது. போராட்டம் நடந்த கதை எல்லாம் மறந்துபோய் மக்கள் சீன உணவகத்தை ஏற்றுக்கொண்டார்கள்.

இந்த சூழலில் 1955ல் தைவானில் டெங் எனப்படும் செப் ஜெனெரல் சோஸ் சிக்கன் (general Tsos chicken) எனும் ரெசிபுயை உருவாக்கினார். அவர் சீனாவின் ஹ்யூனான் மாநிலத்தில் மிக பிரபலமானவர். டெங்கின் ரெசிப்யை காப்பி அடித்து வாங்க் எனும் சீனர் நியூயார்க்கில் 1972ல் சீன உணவகம் துவக்கினார்.

அவரது நல்லநேரம் நிக்சன் அப்போது சீனாவுக்கு விஜயம் செய்திருந்தார். நிக்சனுக்கு பரிமாறபப்ட்ட சீன உணவுகள் பத்திரிக்கையில் வெளியாகி பரபரப்பை ஏற்படுத்தி இருந்தன. பலரும் சீன உணவகங்க்ளுக்கு போன் செய்து "நிக்சன் சாப்பிட்ட சீன உணவுகள் வேண்டும்" என கேட்க ஆரம்பித்தார்கள். அந்த சூழலில் வாங்கின் உணவகம் பெரும்புகழை அடைந்தது.

அதன்பின் ஜெனெரல் சோஸ் சிக்கன் மிக பிரபலம் அடைந்தது. ஆனால் அதன் ஒரிஜினல் ரெசிபியை இப்ப யாரும் பின்பற்றுவதில்லை. பலவிதங்களில் மாற்றம் அடைந்தது ரெசிபி. ஆனால் இன்றூ ஜெனெரல் சோஸ் சிக்கன் இல்லாத சீன அமெரிக்க உணவகம் கிடையாது. ஜெனெரல் சோஸ் பெயரை கேள்விப்படாத அமெரிகக்ரும் கிடையாது. ஆனால் அவர் யார் என யாருக்கும் தெரியாது.

ஜெனெரல் சோஸ் சிக்கன் இப்படி பிராபல்யம் அடைந்ததும் நியூயார் டைம்ஸ் ஜெனெரல் சோவின் மாநிலமான ஹூனான் மாநிலம் சென்றது. அங்கே விசாரிக்கையில் யாருக்கும் இப்படி ஒரு உணவு இருப்பதே தெரியவில்லை. ஜெனெரல் ட்சோவின் வம்சாவளியினர் ஹூனானில் இருந்தார்கள். அவர்களுக்கும் இப்படி ஒரு உணவு இருப்பதே தெரியவில்லை. அதை அவர்கள் இதுநாள் வரை சாபிட்டதும் இல்லை.

அமெரிக்காவில் ஐம்பதாயிரம் சீன உணவகங்கள் உள்ளன. சீன உணவகங்களை ஆதரிப்பவர்களில் முதன்மையானோர் யூதர்கள். காரணம் கிறிஸ்துமஸ் அன்று திறந்திருக்கும் ஒரே உணவகம் சீன உணவகம் தான். விடுமுறை என்பதால் அன்று சமைக்க மாட்டார்கள். கிறிஸ்துமஸை கொண்டாடுவதும் இல்லை. ஆக சீன உணவகத்தில் அன்று யூதர் கூட்டம் நிரம்பி வழியும்.

இது குறித்த ஜோக் ஒன்று

யூதர்கள் தோன்றி 5000 வருடம் ஆகிறது

சீனர்கள் தோன்றி 4000 வருடம் ஆகிறது

ஆயிரம் ஆண்டுகள் சீன உணவு இல்லாமல் எப்படி சமாளித்தாரக்ள் யூதர்கள் என்பதுதான் வியப்புக்குரியது!!!!



(புகைப்படத்தில்: ஜெனெரல் சோஸ் சிக்கன்)

---



**செல்வன்**
holyape@gmail.com

---

21.

# வினைவிளங்கு தடக்கை விறலோய் கேட்டி!

– இன்னம்பூரான்.

### ‘வினைவிளங்கு தடக்கை விறலோய் கேட்டி…!’
### -பளிக்கறை புக்க காதை: 112-121: மணிமேகலை

மணிமேகலை காப்பியத்தில் ‘செயல் திறனுடையவனே! கேட்பாயாக’ என்று விளித்த சொற்றொடரே, நோயற்ற வாழ்வை மக்களே அமைத்து கொள்ள முடியும் என்பதை உணர்த்த, பொருத்தமான தலைப்பு. அசகாய சூரர்கள் நமது மக்கள், துயில் கலைந்துவிட்டால்!

அன்றாட வாழ்க்கையில் நாம் தூய்மையுடன் இயங்கினால் நோய்கள் பல அணுகா. சுத்திகரிக்கப்பட்ட குடிநீர் பற்பல கிருமிகளை அண்ட விடாது. கை கால் கழுவுவதின் முக்கியத்துவத்தை செம்மல்வைஸ் 1847 லேயே நிறுவி விட்டார். இல்லம் தோறும் தங்கு தடையில்லாமல் கொழிக்கும் குப்பையையும், கூளத்தையும் அகற்றி சுற்றுப்புறச்சூழலை பாதுகாப்பது மக்களின் கையில் தான் இருக்கிறது. மகட்பேறு காலத்து கவனிப்பு, மழலைகளுக்கு தடுப்பூசி, வளரும் பருவத்திலிருந்து உடற்பயிற்சி, உண்ணும் உணவிலும், பருகும் நீரிலும் கவனம், நடை, உடை, பாவனைகளில் பண்பு, லாகிரி விலக்கு, பாவேந்தரின் ‘குடும்ப விளக்கு’ இல்லறம், முதியோர் சேவை ஆகியவற்றை கற்றுத்தரக்கூடிய விழிப்புணர்ச்சி, ‘வரப்புயர…குடி உயர்வது’ போல, வாழ்க்கைப் பயணத்தின் தரமுயர்த்தும். பட்டி, தொட்டி தோறும், மக்களை ஈர்க்கும் வகையில் திட்டமிடப்பட்ட விழிப்புணர்ச்சி முகாம்கள் நடத்தப்பட வேண்டும். விழிப்புணர்ச்சி, திருமூலர் ‘உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான்’ என்று அருளிய ஆலயத்தின், அடித்தளம்.

சுகாதாரத்தை பள்ளிகளில் ஆசிரியர்கள் அனுபவக்கூறாக, சுயநடத்தை மூலம், படிப்படியாக பயிற்சியுடன் கற்றுக்கொடுக்கவேண்டும். காந்தீயத்தின் அடிப்படையில் கழிவறை சுத்தம் செய்வது முதல் உறுப்பு தானம் வரை கற்பிக்கப்படவேண்டும். விடலைப்பருவம் வருமுன் மென்மையான பாலியல் பாதுகாப்புப்பாடங்களை பெற்றோர் உதவியுடன் அளிப்பது போன்ற ‘வருமுன் காப்போன்’ செயல்கள் ஊக்குவிக்கப்படவேண்டும். அறியாமையினாலும், அசட்டையினாலும், புற்று நோய், நீரழிவு, இதய பாதிப்புகள், இரத்த அழுத்தம் போன்றவற்றுக்கு மக்கள் மிகவும் தாமதித்து வருவதால், உரிய நிவாரணம் கிடைப்பதில்லை. பசுமரத்தாணி போல்

மனதில் படியும் முறையில், எச்சரிக்கைகளை சித்தரித்து விளக்குவது எளிது. சான்றாக,எதிராஜ் கல்லூரியும் மதராஸ் மருத்துவ கல்லூரியும் இணைந்து, காய்ச்சிய எண்ணையில் திரும்பத்திரும்ப சமைப்பதின் அபாயத்தை நிரூபித்துள்ளன. உள்ளூர் ஆர்வலர்கள் மூலம் இரத்த அழுத்தத்தை பரிசோதித்து, ஆலோசனை வழங்கி, சிறுநீரகம் திறன் இழப்பத்தை தடுத்தாட் கொள்ளமுடியும் என்பதை சென்னைக்கு அருகே நிரூபித்ததை, 'நேச்சர்' என்ற பிரபல மருத்துவ இதழ் பாராட்டியிருக்கிறது. உடனடியாக, திறந்த மனதுடன், இத்தகைய பணிகளுக்கு அரசும் வடம் பிடித்தால், கோடிக்கணக்கான மக்கள் பயன் பெறுவர்; செலவு கணிசமாகக் குறையும். மக்களே நோயற்ற வாழ்வை அமைத்துக்கொள்வார்கள். வருங்கால சந்ததிகள் நீடூழி வாழ்வார்கள். மருத்துவ படிப்பில் சமுதாய நலன் பொருட்டு இயங்கும் 'வருமுன் காப்போன்' துறை மேலும் பிரகாசப்படுத்தப்படவேண்டும்.

சித்தம், யுனானி, ஹோமியோபதி, ஆயுர்வேதம், இயற்கை வைத்தியம் ஆகியவற்றில் குறை காணத் தேவையில்லை. அவற்றின் மேன்மையை ஆய்வு மூலம் கண்டறிவது, அரசின் கடமை. எனினும்,பாமரர்களுக்கு உகந்த நிவாரணம் பற்றியும், போலி வைத்தியர்களை தவிர்க்கவும் ஆலோசனை தரும் மையங்கள் பெருகவேண்டும். உதாரணமாக, நீரழிவு நோய்க்கு பூரண நிவாரணம் எந்த முறையிலும் கிடையாது. ஆராய்ச்சி மூலம் அலோபதி அந்த வியாதியை கட்டுப்பாட்டில் வைக்க உதவுகிறது. புற்று நோய் தீவிரமானது; உயிர் கொல்லி. இன்றே அறுவை சிகிச்சை அவசரம் என்ற நிலையில் மற்ற முறைகள் உதவா. தற்காலம், இந்த சிக்கல்களை அவிழ்க்க முடியாமல் பாமரன் திண்டாடுகிறான்; இறந்தும் போகிறான், சொத்துப்பத்துக்களை இழந்தபின். பணம் பறிக்கும் கார்ப்பரேட் ஆஸ்பத்திரிகள் பெருகி விட்டன. வைத்தியம் சம்பந்தமான காப்புரிமை திட்டங்களை தணிக்கை செய்யும் அளவுக்கு மக்கள் மன்றங்கள் உருவாக வேண்டும்.

அறுவை சிகிச்சைகள் மிகவும் முன்னேறிவிட்டன. வயறு அதிசயங்கள் நிறைந்த ஆலயம் என்றொரு மருத்துவ பழமொழி. தற்காலம், செரிமான வியாதிகள் பொருட்டு இயங்கும் அறுவை சிகிச்சைத்துறை அவற்றை விட அதிசய நிவாரணங்கள் தருகிறது. மற்ற அவயவங்கள் பொருட்டும் அத்தகைய முன்னேற்றம் காண்கிறோம். அரசு நடத்தும் ஆஸ்பத்திரிகளில் ஏழைபாழைகளுக்கு இலவசமாகவே நிவாரணம் கிடைக்கிறது. கடினமான, சிக்கல் மிகுந்த அறுவை சிகிச்சைகள் அன்றாடம், வாகை சூடி, நிறைவேறுகின்றன. இவற்றை பன்மடங்கு பெருக்குவதும், நாட்டின் எல்லா பகுதிகளுக்கும் இவை எளிதில் கிடைப்பதும் அவசரத்தேவை. மக்கள் முடிந்தவரை நற்பெயர் பெற்ற அரசு ஆஸ்பத்திரிகளுக்கு செல்வது சாலத்தகும்.தொலைநோக்கில் பார்த்தால், இது தான் சிக்கனம், மக்கள் சேவை, மருத்துவ சாத்திரத்தின் இலக்கு.

முதியோர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருவதால், அவர்களின் மருத்துவத்தின் தேவை ஏறி வருகிறது. பெற்றெடுத்த செல்வங்களும், சமுதாயமும், அரசும், முதியோர்களுக்காக, இணைந்து பயணிப்பது உசிதம். கவனத்துடன் செயல் பட்டால்,

குறைந்த செலவில் அதிக பயன் காண முடியும். உளவியல் இங்கு கை கொடுக்கும். அன்பு அருமருந்தாக நிவாரணம் தரும்.

இறந்தவர்களின் உறுப்புக்கள் மற்றவர்கள் உடலில் வாழும் காலத்தில் நாம் இருக்கிறோம். இது ஒரு இறவாவரம். தமிழகத்தில் நடக்கும் உறுப்பு தானம் பற்றிய அதிசய செய்திகளே விழிப்புணர்ச்சியின் அடித்தளம். முடிவாக கூறப்போனால், உறுப்புகளுக்கு ஒரு மறுவாழ்வு திண்ணம். அதைப்பற்றி இடை விடாத பிரசாரமும், சட்டத்திருத்தங்களும் தேவை.

நோயற்ற வாழ்வை மக்களே அமைத்து கொள்ள முடியும் என்பதை விளக்க ஒரு நூலே தேவை. எனவே, இந்த கட்டுரை ரத்னசுருக்கமான ஒரு அறிமுகமே. [497]

ஆசிரியர் குறிப்பு:
சென்னை மாநகரத்தின் பழம்பெருமை வாய்ந்த மருத்துவ மையம்: General Hospital,Madras & Madras Medical College. நானூறு வருடங்களுக்கு மேலான பாரம்பரியம். அங்குள்ள செரிமான வியாதிகளுக்கு அறுவை மூலம் தீர்வு காணும் துறை சுதந்திரதினம் பொருட்டு, மக்களிடையே குறுகிய காலகட்டத்துக்குள் ஒரு கட்டுரை போட்டி (500 சொற்களுக்குள்) நடத்துவதாகவும், ஜூலை 31, 2015 கெடு என்றும் அறிவித்தார்கள். நான் அறிவிப்பு வந்த அன்றே கட்டுரையை அனுப்பிவிட்டு, ஆகஸ்ட் 2 அன்று வெளியூர் சென்று விட்டேன். இதை மறந்தும் விட்டேன். ஆகஸ்ட் 14 மாலை ஒரு குறும் தகவல். உங்கள் கட்டுரைக்கான மெடலை நாளை வந்து பெற்றுக்கொள்ளவும். உம்மை சிறப்பிப்போம். [‘எல்லாரும் காத்திருப்பார்கள், உடனே வர’ என்று நினைத்திருப்பார்கள் போல!] நான் போக இயலவில்லை. என் தம்பி மூலமாக கொடுத்து அனுப்பினார்கள்.

---



இன்னம்பூரான்
Innamburan S.Soundararajan
innamburan@gmail.com

---

## 22.

## “பாரத ரத்னா கே.காமராஜ்” - கர்மவீரர் காமராசர்!

-- இன்னம்பூரான்.




**பாரத ரத்னா கே.காமராஜ்**

காமராசர் பாமரனின் பிம்பம். பிரதிபிம்பம் அன்று. மக்கள் என்ற கடலோடு கலந்து உறவாடிய தலைமாந்தன். மண் வாசனை பூமியில் ஊன்றிய கால்களை அவர் அகற்றியதும் இல்லை; ஆகாயகோட்டை கட்டியதும் இல்லை. அதனால், பாமரமக்களின் வாழ்வாதாரம் அவரது இதயகமலத்தில். அவர் முதல்வராக இருந்த போது, கலோனிய அரசின் இரும்புக்கோட்டை எனப்படும் ஐ.சி.எஸ் அதிகாரிகள் உயர்பதவிகளில் இருந்தார்கள். படிக்காத மேதை என்று தவறாக சுட்டிக்காட்டப்பட்ட முதல்வரிடம் அவர்கள் மிகுந்த மரியாதையுடன் பழகினார்கள். அதன் பின்னணியை ஒரு ஐ.சி.எஸ். அதிகாரி கூறியதை இங்கு பகிர்ந்து கொள்கிறேன்.

கிராமங்களுக்கு மின் வசதி கொடுக்கும் திட்டத்தின் படி அந்தந்த ஜில்லா (மாவட்டம்) கலைக்டர்களிடமிருந்து நான்கு கிராமங்களை பற்றி பரிந்துரை வரவேண்டும். இது சம்பந்தமான முடிவுகளை எடுக்கும் அமைச்சரவை கூடியபோது ஒரே ஒரு கலைக்டரிடமிருந்து பரிந்துரை வரவில்லை. முதல்வருக்கு திடீரென்று

அசாத்தியமான சினம் வருவது உண்டு, நற்காரியங்களுக்கு யாராவது முட்டுக்கட்டை போட்டால். அதனால் அமைச்சரவையில் ஒரு பதட்டம். நிதானமாக 'அய்யா' அவர்கள் (அவரது இந்த அடையாளம் தான் புழக்கத்தில் இருந்தது) அந்த ஜில்லாவின் நான்கு கிராமங்களின் பெயரை பட்டியலில் சேர்க்க சொல்லிவிட்டு, அடுத்த திட்டத்துக்கு போய்விட்டார். நிர்வாகப்புலி என்ற புகழ் வாய்ந்த அந்த அதிகாரி, "மக்கள் தொகை/வறுமை/வேளாண்மை தேவை/கல்வி/மின் இணைப்பு சாத்தியம்/ காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு என்று எப்படி பார்த்தாலும் இத்தகைய தேர்வை எந்த கலைக்டரும் செய்திருக்கமுடியாது" என்றபோது, குழுமியிருந்த அதிகாரவர்க்கம் மக்களாட்சியின் மகத்துவத்தை உணர்ந்தது. அய்யா அவர்களின் காலடி படாத கிராமமே கிடையாது எனலாம். தமிழ் நாட்டின் புவியியல் பாடம் எடுக்க அவருக்கு இணை யாரும் இல்லை; இது அய்யாவே சொன்னது. பாரத மிகுமின் நிறுவனத்துக்குத் திருவெறும்பூரை பரிந்துரைத்தவர், அய்யாவே. மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்த்து கற்றாரை காமுற்றவர் அல்லவா! ஔவை பாட்டி அகமகிழ்வாள்.

அதே நிர்வாகத்திறனின் மறுபக்கம்: 1954ல் முதல்வரான அய்யா அப்போது சட்டமன்றத்தில் அங்கத்தினர் அல்ல. பிற்காலத்து மாஜி பிரதமரை போல, மேல் மன்றத்தில் இடம் பெற்று இயங்க மறுத்ததே, மக்களாட்சிக்கு அவர் கொடுத்த மரியாதை. குடியாத்தத்தில் இடை தேர்தல்; கம்யூனிஸ்ட் போட்டி. இருபக்கமும் தீவிர பிரச்சாரம். ஆனால், வாக்காளர் நியாயமாக கேட்ட மேம்பாலம் பற்றி வாக்குறுதி அளிக்க அய்யா மறுத்து விட்டார். அவருடைய விதுரநீதி: "நியாயமே ஆயினும், என் வாக்குறுதிக்கு இணையாக எதிர்கட்சி தோழர் கோதண்டம் வாக்குறுதி கொடுக்க முடியாது. நான் அந்த அதிகார துஷ்பிரயோகம் செய்வதற்கில்லை." எட்டே அமைச்சர்கள் இருந்த அவரது அமைச்சரவையில் நால்வர், இவருடைய அலைவரிசையில் இல்லை என்றாலும், தகுதிக்கு மதிப்பு கொடுத்தார். இதை எல்லாம் எந்த பள்ளியில் சொல்லிக்கொடுக்கிறார்கள்?

ராஜாஜிக்கும் காமராசருக்கும் கருத்து வேற்றுமை நிலவியது என்றாலும், நகராட்சியில் அரசியல் வாழ்க்கையை தொடங்கிய இருவருக்கும் கண்ணியம் தான் அடித்தளம். இருவரும் சிபாரிசு செய்யமாட்டார்கள். ஒரு நல்வழிப்பாதையிலிருந்து மற்றொரு நல்வழிப்பாதைக்கு குறுக்கு வழியில் செல்லமாட்டார்கள். இருவரும் சுற்றத்தை அண்ட விடமாட்டார்கள். சராசரி மனிதர்களோடு அவர்கள் இருவரும் பழகும் விதம் அலாதி. ராஜாஜி சென்னை வரும்போது, விமான நிலையத்தில் வரிசையாக பலர் நிற்பார்கள். ஒருவரிடன் மகளின் திருமணத்தை பற்றியும், மற்றொருவரிடம் மகனுக்குக் கிடைத்த வேலை பற்றியும், மற்றொருவரிடம் நாற்று நட்டச்சா என்றும் கேட்பார். எல்லாருக்கும் தன்னை பற்றி மட்டுமே மூதறிஞர் நினைக்கிறார் என்று தோன்றும். அதே மாதிரி பெருந்தலைவர் காமராசர் எல்லாரையும் நினைவில் வைத்துக்கொண்டு, அவரவருக்கு இதமாக பேசுவார். ஆயுள் முழுதும் முருக தனுஷ்கோடி போன்ற அன்யோன்ய நட்புகள் சில.

அவருடைய தமிழ், கறார் கலந்த கொஞ்சும் தமிழ்; ஒரு 'ரசாயனக்கலவை' எனலாம். அதனால், அதிகார மையங்களில், அய்யா சொல்வதை எல்லாரும் கவனமாகக் கேட்பார்கள். 'பார்க்கலாம்' என்ற சொல் காமராசருடன் ஐக்யமாகி விட்டது. அது அவருடைய நிதானத்தையும், சிந்தித்து செயல் படுவதை சுட்டுகிறதே தவிர, அங்கு எள்ளலுக்கு இடம் கிடையாது. அய்யா அவர்களின் மேலாண்மையையும், அரசியல் அணுகுமுறையையும், நிர்வாகத் திறனையும், நாட்டுப்பற்றையும், கொள்கை என்ற அசையா நிலையையும், மக்கள் தொண்டையும், தொலை நோக்கையும், விருதுப்பட்டியும் (பின்னர் தான் விருதுநகர் என்ற விலாசம்!) அறியும்; தமிழகமும் அறியும்; இந்தியா முழுதும் அறியும். 'மாடு பிடித்த கையில் ஏடு கொடுத்த மகராஜன்' ஒரு ரசவாத வித்தகர் தான். கர்மவீரர் காமராசரை போல் ஒருவரை '...நாடு பார்த்ததுண்டா இந்த நாடு பார்த்ததுண்டா...' என்று கவிஞர் வாலி விசனத்துடன் வினவிய போது, 'இல்லை! இல்லை!' என்று எட்டுத் திக்குக்களிலிருந்தும் எதிரொலி கேட்டதாம்!

அத்தகைய சான்றோனின் வரலாறு, வருங்கால சந்ததிக்கு வாழ்வியல் பாடமாக அமையும் என்பதில் ஐயம் ஒன்றும் இல்லை. 'காமாட்சி' குலதெய்வம். அந்த பெயரை அவருக்கு சூட்டினார்கள். அன்னை சிவகாமிக்கு, அவர் 'ராசா'. திரிபு: காமராசு. ஆறு வயதில் தந்தை மரணம்; பள்ளிப்படிப்புக்கு முழுக்கு. மாமனின் துணிக்கடையில் எடுபிடி வேலை. சிறுவயதிலேயே நாட்டுப்பற்று பற்றிக்கொண்டது. 16 வயதிலேயே அரசியல் பணி; ராஜாஜி தலைமையில் வேதாரண்யத்தில் உப்பு சத்தியாக்ரகம்; முதல் முறை கைது. நாடு விடுதலை பெறுவதை கண்டு களிக்கவேண்டும் என்று ஆசைப்பட்ட தீரர் சத்தியமூர்த்தி தான் இவரது அரசியல் ஆசான். அவரது ஆசை நிறைவேறவில்லை எனினும், ஆகஸ்ட் 15, 1947 அன்று அவரது இல்லத்தில் அய்யா அவர்கள் தேசீயக்கொடியை ஏற்றியபோது, அவரது ஆத்மா பங்கேற்றுக்கொண்டிருக்கும்.

மூன்று முறை தமிழகத்தின் முதல்வராக பணி புரிந்த காமராசர், 1954ல் முதல் முறை பதவி ஏற்றுக்கொள்ளும் முன்னால், தீரர் சத்தியமூர்த்தி அவர்களின் இல்லத்துக்குச் சென்று, அவருடைய படத்துக்கு மாலை அணிவித்து ஆசி பெற்ற பின் தான் அரசியல் பணியை துவக்கினார். அது அமோகமாக அமைந்தது என்பது குறிப்படத்தக்கது. மூன்று முறை (1954-57, 1957-62, 1962-63) முதல்வராக மக்களால் அரியணையில் அமர்த்தப்பட்ட காமராசர், கட்சிப்பணியும், நாட்டுக்குத் தொண்டும் முக்கியம் என்று ஒரு நிலைப்பாடு எடுத்தது, பிரதமர் நேருவைத்தவிர மற்றவர்களுக்கு வியப்பு அளித்தது. முதல்வர் பதவியை உதறினார். அக்டோபர் 9, 1963 அன்று அகில இந்திய காங்கிரசின் தலைவர் ஆனார். அய்யா அவர்களின் தியாகமும், அரசியல் உத்தியும் பெரிதும் போற்றப்பட்டன.

நேரு மறைந்தவுடன், பிரச்னைகள் அணுகாத வகையில், லால் பகதூர் சாஸ்திரி பிரதமராவதற்கும், அவருடைய அகால மரணத்திற்கு பிறகு இந்திரா காந்தி

பிரதமராவதற்கும் வழி வகுத்தது, காமராசர் தான். என்றும் தன் கடமையிலிருந்து வழுவாத காமராசரின் கரும வீரத்துக்கு, இந்திரா காந்தியின் தன்னிச்சைப்போக்கு ஒரு அறை கூவலாக எழுந்தது. கட்சி உடைந்தது. இந்திரா காந்தியின் "அவசர நிலை" என்ற மின்வேலி அவருக்கு தாங்கொண்ணா கவலை கொடுத்தது. தேசபக்தர்களான ஜெயப்பிரகாஷ் நாரயணன், மொரார்ஜி தேசாய் போன்றவர்கள் சிறையில் வைக்கப்பட்டிருந்தினர். காந்தியடிகள் பிறந்த நாளன்று (அக்டோபர் 2, 1975) அவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள் என்று எதிர்பார்த்திருந்தார் காமராசர். ஆனால், அன்று ஆச்சார்ய கிருபளானியும் கைது செய்யப்பட்டார் என்ற செய்தி அவரை மிகவும் வாட்டியது. அன்றே உயிர் துறந்தார். அவர் இறந்த போது பையில் இருந்த சிறிதளவு பணத்தைத் தவிர வேறு வங்கிக் கணக்கோ, சொந்த வீடோ, வேறு எந்த வித சொத்தோ இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. தன் வாழ்நாள் இறுதி வரை வாடகை வீட்டிலேயே வசித்தார்.

தியாகராய நகரின் திருமலைப்பிள்ளை வீதியில் அவர் வாடகைக்கு இருந்த தெருவிலே நானும் குடி இருந்ததால், அடிக்கடி காலையில் அவருடைய வீட்டை தாண்டித்தான் போகவேண்டும். மூன்று வயது சிறுவனான என் மகன், அவர் வீட்டு வாசலில் நின்று விடுவான்; வாசலில் நிற்கும் காவலரின் துப்பாக்கியை தொடவேண்டும்! அந்த நாளில் தடாலடி காவல் பட்டாளம் எல்லாம் கிடையாது. ஒருவர் மட்டும் தான். சில நாட்கள் அரிதாக, அய்யா அவர்கள் அந்தப்பக்கம் நின்று கொண்டிருப்பார். சிறுவனுடன் இரண்டு வார்த்தை பேசுவார். எனக்கு புளகாங்கிதம். பொது கட்டுரையில் சுய அனுபவங்களை மட்டுறுத்த நினைத்தேன். இல்லை. சொல்லத்தான் வேண்டும். அய்யா அவர்களை பற்றி எது சொல்ல நேரிட்டாலும், இன்றைய இளைய சமுதாயம் அவரது வாழ்க்கைக்குறிப்புகளின் ஒவ்வொரு வரியிலும் நல்வழி கற்கக்கூடும்.

சான்றாக, மேலும் இரு செய்திகளை கூறலாம். விருதுநகரில் வசித்த அன்னைக்கு மாதம்தோறும் பணம் அனுப்புவார். அன்னை சிக்கனமாக வாழ்ந்தால் தான், அது போதுமானது. காமராசருக்கு உள்ளூரில் பக்தி கலந்த மரியாதை இருந்தது. அக்காலம் வீடுகளுக்கு குழாய்நீர் கொடுப்பது சொற்பம். தெருக்குழாய் தான் நீருக்கு ஆதாரம்; அஞ்சல் அதிகாரி வீட்டு வாசலில் தபால் பெட்டி வைப்பது போல, தெருக்குழாயை காமராசர் அன்னைக்கு வசதியாக, அருகில் வைத்துக்கொள்ள அவருடைய சகோதரிக்கு ஆசை; அதை அய்யா நிராகரித்து விட்டார். அதை விட முக்கிய அறிவுரை, ஒரு நிகழ்வு ரத்து செய்ததில். அரசியல் வாதிகளின் திருவிளையாடல்களுக்கு எல்லை கிடையாது. யாரோ ஒருவரின் தூண்டுதலால், பிரதமர் நேரு தமிழகத்தில் பயணம் செய்த போது, விருதுநகரில் காமராசரின் அன்னை அவருக்கு விருந்தோம்ப ஏற்பாடு நடந்தது, அவருக்கு தெரியாமல். நேருவும் சம்மதித்து விட்டார். இந்த சேதி அய்யாவுக்கு தாமதமாகத்தான் கிட்டியது. அன்னையிடம் கோபித்துக்கொண்டார். நிகழ்வை ரத்து செய்து, நேருவிடம் தெரிவித்து விட்டார். அதனால் ஏற்பட்ட இக்கட்டான நிலைமையை அவர்

பொருட்படுத்தவேயில்லை. நேர்மை நீர்த்து விடக்கூடாது என்பதில் அவர் வாழ்நாள் முழுதும் திண்ணமாகவே இருந்தார்.

பாருங்களேன். நான் அவரை கடைசியாக பார்த்தது, ராஜாஜியின் மரணத்தின் போது. ராஜாஜி ஹாலில் அவருடைய பூதவுடல் மக்கள் அஞ்சலி செலுத்துவதற்காக வைக்கப்பட்டிருந்தது. ஏகப்பட்டகூட்டத்தில் நடுவில் அய்யா அவர்கள் 'தனிமையில்' நின்று கொண்டிருந்தார். லேசான தூறல். அக்காலத்தில் காவல் துறையின் மாணிக்கமாக கருதப்பட்ட கமிஷனர், கே.ஆர்.ஷெனாய் (ஆம். அவரை கேலி செய்துதான் கண்ணதாசன் அய்யாவிடம் செமையாக வாங்கிக்கட்டிக்கொண்டார்.) அவரை அணுகி, 'அய்யா களைத்து போய்விடுவீர்கள். ஒரு நாற்காலியும் குடையும் கொண்டு வருகிறேன்' என்றார். 'பெரியவரே போய்விட்டார்.'என்றவர், மவுனத்தில் ஆழ்ந்தார். வேறிடம் செல்லவேண்டிய அவசரம், கமிஷனருக்கு. ' அய்யா மனதளவில் வேறு எங்கோ இருக்கிறார். அவரை விட்டு நகராதே. நான் விரைவில் வருகிறேன்.' என்று சற்றே பரிச்சியமாகியிருந்த என்னிடம் கட்டளையிட்டு விட்டு, விரைந்தார்.

நான் நகரவில்லையே - இன்றும் தான். வாழ்நாள் முழுதும் நகரமாட்டேன்.

சித்திரத்துக்கு நன்றி: http://static-numista.com/catalogue/photos/inde/g1117.jpg
நன்றி வல்லமை:http://www.vallamai.com/?p=59957

---



இன்னம்பூரான்
Innamburan S.Soundararajan
innamburan@gmail.com

---

23.

# கரிசல்பூமி தந்த கனித்தமிழ்க்கவிஞன்!

-- ஷைலஜா.

கார்த்திகைமாதக்கடைசிநாள் ஒன்றில் கரிசல்பூமி, கவிபூமிக்கு ஒரு பரிசினைக் கொடுத்தது. நெல்லைஜில்லா கொள்ளைப்பெருமை கொண்டது! கோவில்பட்டி கொடுத்துவைத்தது! எட்டயபுரம் ஏற்றம் கொண்டது.

சுப்பையாவின் திறமையை சொல்லுவதும் எப்படி ஐயா! முண்டாசுக்கவிஞன் பெருமையை தண்டோரோ போட்டுத்தானா சொல்லவேண்டும்! மல்லிகை மணத்திற்கு விளம்பரமா தேவை? இல்லை இல்லை .. அவனை நினைக்காத நாள் இல்லை.ஆனால்.நினைவுநாளில் சற்று கூடுதலாய் நினைக்கவைக்கிறது ,அவன் விட்டுச்சென்ற பாக்கள் என்னும் பூக்களின் வாசம்!

கல்வடிவக்கடவுளைபோல் அவன் சொல்வடிவத்தமிழ் சிற்பம் காலத்தால் அழியுமா என்ன!வெறும் தமிழ் வண்ணத்தமிழ் ஆனது அவன் கைவண்ணத்தில்! அணையா ஜோதியாக அவன் அறிவு விளக்கு எரிந்துகொண்டே இருந்ததினால் அளவில்லா கவிதைகளை அள்ளி வழங்கிவிட்டான்! அவனே மரபுக்கும் புதுமைக்கும் நடுவே நின்ற நெருப்பு!

முன்னைப்பழமையும் பின்னைப்புதுமையும் அவன் அடிமுடியைக்காணமுடியாமல் இன்னமும் அலைந்துகொண்டிருக்க ஓர் அதிசியமாக ஓங்கி நிற்கிறான் சுப்ரமண்யபாரதி! இந்த எட்டயபுரத்து சிவகாசிப்பட்டாசின் கவிதைகள் ஒவ்வொன்றும் கந்தகக்கடுதாசி!

தமிழ் அவனுக்குத்தோழி. நஞ்சுதமிழ்தனை ஒழித்து நல்லதமிழில் அவன் எழுதும் பாட்டினை ரசிக்க உடன் இருப்பாள் பல நாழி.

முப்பத்தி ஒன்பதுவயதிற்குள் தன் முழுத்திறமையையும் காட்டிவிட்டு மறைந்த மகாகவிஞனின் நினைவுதினம் இன்று.

பாரதியின் பன்முக ஆளுமை பலரும் அறிந்ததே ஆயினும் அவனது பிறந்த ஊர் நேசம் பலபாடல்களில் பழகிய சொற்களில் தெறிக்கும். பிறந்துவளர்ந்த ஊரின் மீது பற்று இல்லாதவர் யார்?

பிறந்த ஊருக்குப்போய்ப்பாருங்கள்அங்கு வீசும் காற்றும் காதோரத்தில் கதைபலபேசும். பாரதியின் நினைவுநாளில் அவனது பிறந்த மண் வாசம் வீசும் சிலபாடல்களைப்பார்க்கலாம்.

தமிழகத்தில் தமிழின் அழகு ஊருக்கு ஊர் வித்தியாசப்படும். பாட்டுப்பாடுதல் என்பதை பாட்டு படித்தல் என்பார்கள் நெல்லையில்.

பாரதியும், தனது தீராதவிளையாட்டுப்பிள்ளை என்ற பாடலில்,

"புல்லாங்குழல்கொண்டுவருவான்
அமுது பொங்கித்ததும்பு நல்
கீதம் படிப்பான்..."
என்று சொல்லி இருப்பார்.

இந்தப்பாடலை தனது முப்பதாவது வயதில் பாடி இருக்கிறார். அதாவது பிரந்தமண்ணைவிட்டு வந்தபலகாலம் கழித்து! கீதம் பாடுவான் என்றில்லாமல் கீதம் படிப்பான் என்கிறார்.

படித்தல் வாசித்தல் என்ற இரண்டுமே ஒரேபொருளை வழங்குகிறது. குழல் வாசித்தல் வீணை வாசித்தல் என்கிறோம். இந்த வழக்கம் இன்னமும் நம்மிடையே இருக்கிறது.

கண்ணன் என் காதலன் பாட்டில் ஓர் இடம் பார்க்கலாம்,

"கனவுகண்டதிலே ஒருநாள்
கண்ணுக்குத்தோன்றாமல்
இனம் விளங்கவில்லை எவனோ
என் அகம் தொட்டுவிட்டான்"

இதில் இனம் என்பதற்கு அடையாளம் என்று பொருள். இன்றும் கோவில்பட்டிபகுதிகளில் இந்த இனம் எனும் சொல்லாட்சி இருக்கிறது. மற்ற மாவட்டங்களில் பெரும்பாலும் அடையாளம் என்றே சொல்கிறோம்.

பாரதியின் சந்திரிகையின் கதை கடைசிப்பக்கத்தில் இப்படி எழுதியிருக்கிறார்.

"....இவர் எத்தனைக்கெத்தனை அவள் உறவையும் ஊடாட்டத்தையும் விரும்பத்தொடங்கினாரோ அத்தனைக்கும்அத்தனை இவள் இவரிடமிருந்து ஒதுங்கவும் மறையவும் தொடங்கினாள். அவளை நாம் காதலிக்கும் யோக்கியதை இல்லாத மனையடிமைப் புகழ்ச்சியாகவும் குழந்தைவளர்க்கும் செவிலியாகவும்

நடத்திவந்தோம். அப்போதெல்லாம் இவள் நமக்கு மிகவும் பணிவுடன் அடிமையிலும் அடிமையாய் நடந்துவந்தாள். இப்போது நாம் பரமார்த்தமாக இவளுடைய அன்பைக்கருதி அதனைவேண்டிச் சருவப்புகுந்தபோது இவள்பண்ணுகிற மோடியும் இவள் செய்யும் புறக்கணிப்புகளும் பொறுக்கமுடியவில்லையே…"

சோமநாதய்யர் என்ற கதாபாத்திரம் இவ்வாறு ஆலோசித்ததாக எழுதியிருக்கிறார் பாரதி. இதில் முதலில்வரும் ஊடாட்டம் என்ற சொல்லைபார்க்கலாம்.

ஊடாட்டம் என்றால் கலத்தல் அடிகலந்து பழகுதல் என்று அர்த்தம். மலையாளமொழியிலும் இந்த சொல் உண்டு. ஊடாட்டம் ஊடுதட்டு ஊடு பாய்ச்சல் ஊடு புகுதல் என்ற வெவ்வேறு பொருள்கொண்ட சொற்களும் நெல்லைப்பகுதியில் சகஜம்.

ஊடாடும் எனும் சொல்லை ஆரண்யகாண்டத்தில் மாரீசன் வதைப்படலத்தில் சூர்ப்பனகை தன் அண்ணன் இராவணனிடம் பேசும்போது 'சீதை என்னும் மானைவைத்துக்கொண்டு நீ இன்பம் துய்ப்பாயாக நான் அனுபவிப்பதற்கு ராமனை அடையும்படி செய்'என்று வேண்டுகிறாள்.

"மீன் கொண்டு ஊடாடும் வேலை மேகலை உலகம் ஏத்த,
தேன் கொண்டு ஊடாடும் கூந்தல், சிற்றிடை சீதை என்னும்
மான் கொண்டு ஊடாடு நீ, உன் வாள் வலி உலகம் காண,
யான் கொண்டு ஊடாடும்வண்ணம் இராமனைத் தருதி என்பால்"

'ஊடாடும்' என்ற சொல் எத்தனை அழகாக கையாளப்பட்டிருக்கிறது! இந்த சொல் ராமாயணத்தில் கையாளப்பட்டிருப்பதால் அன்றே தமிழ்நாடெங்கும் வழங்கிவந்த சொல் என்பது தெளிவு ஆனால் திருநெல்வேலி மாவட்டத்தில் மக்கள் நாவில் இந்த சொல் பயின்றுவரப்பார்க்கிறோம்.

அடுத்து சருவுதல் என்ற சொல்லைப்பார்ப்போம்,

இதற்குப்பழகுதல் கொஞ்சிக்குலாவுதல் என்று பொருள். கொஞ்சிப்பழகுவதற்காக நெருங்கிஉறவாடுதல் இன்னும் பொருத்தமாக இருக்கலாம்.

சருவுதல் என்னும் சொல் கோவில்பட்டிப்பகுதியில் தான் அதிகம்புழக்கத்தில் இருக்கிறது போலும்!

மோடி என்னும் சொல் செருக்கு கம்பீரம் ஆடம்பரம் ஸ்டைல் என்றெல்லாம் பொருள்தருகிறது(பிரதமரை நினைக்கவேண்டாமே?:) மோடி அதிகம்

கம்பராமாயணத்தில் வரும்!!....."...நிந்தன் மோடி கிறுக்குதடி தலையை நல்ல மொந்தை பழைய கள்ளைப்போலே... என்கிறார் திக்குத்தெரியாத காட்டில் பாட்டில்!!

ஆத்திரம் என்ற சொல்லை நாம் கோபமென நினைக்கிறோம் அது அசல்பொருள் அல்லவாம் அவசரம் என்பதே சரியாம். பணம் மிகுந்திருந்தால் ஆத்திர அவசரத்துக்கு உதவும் என்றபழமொழி உண்டே. ஆதுரம் எனும் வடசொல்லே ஆத்திரமாம் ஆதுரம் என்றால் அவசரம் என்றே பெயர். கோபம் அவசரம் என்பவைகளுடன் ஆவல் கடமை என்னும் பொருள்களும் கோவில்பட்டிவழக்கில் இந்த சொல்லுக்கு உண்டு. 'அவருக்கு உன்னைப்பார்க்கவேண்டுமென ரொம்பவும் ஆத்திரம்'என்றால் இங்கே ஆத்திரம் ஆவல் ஆகிறது. பாரதி 'ஆத்திரம்' என்னும் சொல்லை அழகாகப்பயன்படுத்திய பாடல்களை மறக்கமுடியுமா என்ன!

சாத்திரம் பேசுகிறாய் கண்ணம்மா சாத்திரம் ஏதுக்கடி ஆத்திரம்கொண்டவர்க்கே கண்ணம்மா சாத்திரம் உண்டோடி

ஏதுக்கித்தனை மோடிதானோ? பிரபலபாடல் நினைவுக்குவருகிறது இது திரைப்படப்பாடலா என்ன?

இப்படிப்பலப்பல பிறந்த மண்ணின் வாசமிகு வார்த்தைகளை பாரதி தன்கவிதைகளில் அள்ளித்தெளித்திருப்பார்!...

எழுத்துக்களைத் தீப்பந்தங்களாக ஏந்தியபாரதி,தீபங்கள் ஏற்றும் திருக்கார்த்திகைமாதத்தில் பிறந்ததாலோ என்னவோ இப்படிச்சொன்னான்,

தீ இனிது !

ஆம் ஐம்பொறிகளும் தீப்பொறிகளாக வாழ்ந்துகாட்டிவிட்டு வானமேறிவிட்டான் அந்த வரகவி! நமக்கு இனி வாராகவி!

---



ஷைலஜா
shylaja01@gmail.com

---

24.

# ஓங்கி உலகளந்த உத்தமன் வருகின்றான்!

-- ஷைலஜா.

**ஓங்கி உலகளந்த உத்தமன்!**

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, தன் பாசுரத்தில் வேறு எந்த அவதாரத்தையாவதுவேறு எந்த இடத்திலாவது, உத்தமன் என்று அழைத்துப் பாடி இருக்கிறாளா என்று தெரியவில்லை ஆனால் வாமனனை மட்டும் ஓங்கி உலகளந்த உத்தமன் என்கிறாள்! உலகளந்த என்று மட்டும் சொல்லாமல் முதல் சொல்லாக ஓங்கி என்றாள் ஏன்? அந்த சொல்லின் வீச்சு அற்புதமானது!

பாரதி ...'"ஓங்கி வளர்ந்ததோர் கம்பம். அதன் உச்சியின் மேல் வந்தே மாதரம் என்றே...' என்கிறபோது கம்பத்தின் கம்பீரம் காட்சியாகிறது.

மகளைப்போல தந்தை,பெரியாழ்வாரும் உத்தமன் என்கிறார் ஒருபாசுரத்தில்,

"பாடிப்பாடி வருகின்றாயைப்
பற்பநாபன் என்றிருந்தேன்
ஆடிஆடி அசைந்து அசைந்திட்டு
அதனுக்கு ஏற்ற கூத்தை ஆடி
ஓடிஓடிப்போய்விடாதே
உத்தமா..... " என்கிறார்.

நம்மாழ்வாரோ ...

"விதியினால் பெடை மணக்கும் மென்நடைய அன்னங்காள்
மதியினால் குறள் மாணாய் உலகு இரந்த கள்வர்க்கு .." என்கிறார்.

கள்வன் என குற்றமாய் சொல்லவில்லை. 'திருடனே' என உற்றவர்களை செல்லமாய் உரிமையாய் அன்பாய் அழைப்பதுபோலத்தான் இதுவும்..
மேலும்...
மன்னவன் பெரிய வேள்வியில் குறள் ஆய்
மூவடி நீரொடும் கொண்டு
பின்னும் ஏழ் உலகும் ஈர் அடி ஆக
பெருந் திசை அடங்கிட நிமிர்ந்தோன்-

என்றுதான் திருமங்கையாழ்வாரும் அருள்கிறார். நிமிர்ந்தோன் என்பதைவிட ஓங்கி உலகளந்தான் என்கிறபோது அவதாரத்தின் பிரும்மாண்டம் கண்முன் விரிகிறது.

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி.....என்கிறது திருப்பாவை பாசுரத்தின் ஆரம்ப வரிகள்.

ஆண்டாள் பூர்ண அவதாரங்களான ராம-கிருஷ்ண அவதாரங்களப் பாடாமல்,த்ரிவிக்ரமன் பேர் பாடச் சொல்கிறாள். இதே த்ரிவிக்ரம அவதாரத்தை 17வது பாசுரத்திலும்(அம்பர மூடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமானே(மறுபடி ஓங்கி உலகளந்த என்கிறாள்பாருங்கள்) என்றும், 24வது பாசுரத்தின் முதலடியிலும்(அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி! என்றும் ஆண்டாள் போற்றுகிறாள்! ராம-கிருஷ்ண அவதாரங்களில் முறையே ராவணன்,கம்சன் தவிரவும் பல அசுரர்களை அண்ணல் வதம் செய்கிறார். இந்த அவதாரத்தில் மட்டும்(மகாபலியை அழிக்கவில்லை ஆனால், அவன் அகந்தையை அழித்து, அவனைத் திருத்தி தடுத்தாட் கொண்டார் ஆகவேஅந்தக் கருணை வடிவமான வாமன அவதாரமே அவளைப்பெரிதும் கவர்ந்திருக்கவேண்டும்.

மஹாபலி பக்தனாயிருந்தும் அவன் செயல்பாடுகளில் அத்து மீறிய அதிகார துர் உபயோகமும் அட்டூழியமும் இருந்ததால் இப்படி அவனை அப்புறப் படுத்த வேண்டி வந்தது. அதிகாரக்குவிப்பு எதை வேண்டுமானாலும் செய்யச் சொல்லும் அதற்குத் தடைஅவசியம் என்பது எல்லாகாலங்களிலும் பொருந்துகிறதே!

பெருமாள் நெடியவர், குறுகி அறியாதவர்; எல்லா உயிர்களுக்கும் அவை வேண்டும் வரங்களை வாரி வழங்குபவர்; யாரிடமும் எதையும் கேட்காதவர்.இந்திரனுக்காக மகாபலியிடம் சென்றபோது நெடியவர் குறுகி வாமனனாகச் சென்றார். இல்லறத்தார் பிரம்மச்சாரியானார்; வாரிக் கொடுப்பவர்வெறும் மூன்றடி நிலம் கேட்கிறார்.

கிருஷ்ணர் கோவர்த்தன மலையைத் தூக்கியதில் இந்திரன் அவரோடு மாறுபட்டு அபசாரம் செய்தான். அப்படி தமக்கு அபசாரம் செய்தவனே, மகாபலியினால் தனது ராஜ்யத்தை இழந்து துன்பப்பட்டு பிரார்த்தித்த போது, அவனுக்காக மகாபலியிடம் செல்கிறார்.
`அகலகில்லேன் இறையும்' என்று உனது மார்பை விட்டகலாத திருமகளை மறைக்க மான் தோலை மூடிக்கொண்டு நீ பிரம்மச்சாரியாகிவிட்டாய்' என்றார் வேதாந்த தேசிகர்

ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு

இரவின் இளிவந்ததில்

குறள்  சொல்லும் பாடம் இது!

(மாலும் குறளாய் வளர்ந்து இரண்டு மாணடியால்
ஞாலம் முழுதும் நயந்து அளந்தான்...திருவள்ளுவமாலை)

பிச்சை எடுக்கும்போது ஒருவனுடைய கல்வி, கேள்வி,புகழ்,சாதுரியம்,மற்றும் வெற்றி என்ற ஐந்து தேவதைகளும் அவனை விட்டு நிரந்தரமாகப் பிரிந்து மீண்டு வர இயலாத தூரத்துக்கு விலகுகிறார்கள் என்பது தெரியாதா ? அதையும் செய்தான் பெருமாள். அது வாமனாவதாரம். அவன் உத்தமன்.எனவேதான் `ஓங்கி உலகளந்த உத்தமன்' என்றார் நாச்சியார்.

பல வைணவக்கோவில்களில்  இந்தப்பாசுரத்தைசொல்லியபடியே நம் கையில் அர்ச்சனை பிரசாதங்களை தருகிறார்கள் அதுவும் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஓங்கிஉலகளந்த  என்னும் பாசுரம்  எல்லா சந்நிதிகளிலும்  யாராவது ஒருவர் பாடிக்கொண்டே இருக்கிறார்கள்! தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரியும் நீங்காத செல்வமும் எங்கும் நிறைந்திருக்க  ஆண்டாள் அண்ணலிடம் விரும்பிக்கேட்டு அருளிய பாசுரம் இது!

( மகாபலி கேட்டுக்கொண்டபடி  வருடம் ஒருமுறை அவன் தன் மக்களைக்காண வரும் திருநாள்தான்  ஓணத்திருநாள்! இன்றைய நன்னாள்!

---



ஷைலஜா
shylaja01@gmail.com

---

## 25.
# வினாயக சதுர்த்தி

-- தமிழ்த்தேனீ.

வினாயக சதுர்த்தி என்றாலே என் நினைவுக்கு வருவது, நாம் வினாயக சதுர்த்தி கொண்டாட உதவி செய்யும் வியாபாரிகள் தான்.

ஒரு வியாபாரி களிமண்ணை எடுத்து வந்து கற்கள், வேண்டாத கழிவுகள் போன்றவற்றை நீக்கி சுத்தம் செய்து பிள்ளையார் உருவம் செய்ய அச்சுகள் தயாரித்து அந்தக் களிமண்ணால் பிள்ளையார் சிலைகளைச் செய்து, வாங்குபவர்களின் மனநிலையை நன்கு கவனித்து, அவர்களுக்கு வினாயகரின் உருவம் எப்படி இருந்தால் பிடிக்குமோ அப்படி பார்த்துப் பார்த்து கவனமாகச் செய்து, குந்து மணியால் கண்களை அமைத்து, ஒரு தெய்வீகக் களையை அந்தப் பிள்ளையாருக்கு அளிப்பதில் கவனம் காட்டி,மிக நேர்த்தியாக வடிவமைத்து, கூடவே நாம் பூஜை செய்வதற்கென்று, அருகம்புல்லையும் தேடி எடுத்து வந்து, தென்னங்குருத்தில் வரும் மெலிதான ஓலையால் வேயப்பட்ட தோரணங்களை செய்து, பிள்ளையாருக்கு வண்ணக் காகிதங்களை வைத்து, சிறு குச்சிகள் மூலம் கொடையும் செய்து, நமக்கு அளிக்கிறார்களே.

அது மட்டுமல்ல வினாயகருக்கு மிகவும் பிடித்தமான எருக்கம் பூ மாலைகளை நூலில் கட்டி, பெரப்பம் பழம், கொய்யாப்பழம்,மஞ்சள் வாழைப்பழம், பேரிக்காய், ஆப்பிள், கரும்பு, போன்றவைகளையும், வாழை இலை, வெற்றிலை, களிப்பாக்கு, மஞ்சள், குங்குமம், மஞ்சள், திருநீறு பொட்டலங்கள், போன்றவற்றையும், இன்னும் நுணுக்கமாக யோசித்து வைணவர்களும் சைவர்களும் வினாயகருக்கு முப்புரிநூல் அளித்து மகிழும் வண்ணம் அந்தச் சிறு சிலைகளுக்கு போடுமாறு சிறியதாக பூணூல், போன்றவற்றைத் தயாரித்து, பிள்ளையாருக்கு மிகவும் பிடித்தமான அவல், பொரி, கடலை, நாட்டுச் சக்கரை, போன்றவைகளையும் கொண்டு வந்து தங்கள் கடைகளில் பரப்பி வைத்து, அவைகளை மிக எளிதாக நமக்கு கிடைக்குமாறு செய்கிறார்களே, அந்த வியாபாரிகளுக்கு நாம் முதலில் நன்றி சொல்ல வேண்டும், ஏன் என்று சொல்கிறேன்!

"என்னை நிந்தித்தால் கூட பொறுத்துக்கொள்வேன், ஆனால் என் அடியார்களை நிந்திப்பவர்களை, என் அடியார்களுக்கு நன்றி நினையாதவரை, நான் மன்னிக்க மாட்டேன், என்னால் படைக்கப்பட்டவர்களுக்கு சேவை செய்பவர்கள் எனக்கு சேவை செய்பவர்களே, அவர்களை மதியாதவர்களை நானும் மதிக்க மாட்டேன் என்று

இறைவனே கூறுவதாக நம் வேதங்கள் கூறுகின்றன" வியாபார நோக்கம் இருந்தாலும், வியாபார நோக்கிலேதான் அவர்கள் செய்கிறார்கள் என்றாலும், அவர்கள் அவ்விதமாக நமக்கு வேண்டிய பொருட்களைக் கொண்டுவந்து விற்காவிடின், அல்லது ஏதேனும் போக்குவரத்து இடையூறுகளினால் நேரத்துக்கு பொருட்கள் வராமல் போவதன் காரணமாக, சரியான நேரத்துக்கு நாம் பூஜை செய்வதற்கு பொருட்கள் கிடைக்காமல் போகுமேயானால் அப்போது நம் மன நிலமை எப்படி இருக்கும் என்பதை யோசித்துப் பார்த்தால் இந்த வியாபாரிகளுக்கு நாம் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதை நாம் உணர முடியும்.

நம் வினாயகர் இல்லாத நாடுகளே இல்லை என்று சொல்லும் வண்ணம் வினாயகர் உலகமெங்கும் நிறைந்திருக்கிறார், ஆகவே இந்த வினாயக சதுர்த்தியை ஜாதி மத, மொழி,இனம் வேறுபாடுகளைக் களைந்து, மனம் ஒன்றி வழிபட்டு, நமக்கு உதவி செய்யும் யாவரும் நலமாக, வளமாக ஆனந்தமாக வாழ நாமும் வழிபட்டு, நம்முடைய உறவுகள்,நண்பர்கள், அனைவருடனும் கலந்து நம்முடைய வினாயகரை வழிபட்டு மகிழ்வோம்.

ஒவ்வொரு பண்டிகைகளும் நமக்கு ஒரு நல்ல அறிவை போதிக்கட்டும்,ஒற்றுமையை வளர்க்கட்டும், நல்லறிவையும், ஞானத்தையும், அமைதியையும், ஆனந்தத்தையும், ஆரோக்கியத்தையும், சகோதர உணர்வையும் வளர்க்கட்டும். ஒவ்வொரு வினாயகரும் ஒரு போதி மரமே. ஆம், விநாயகர் மிக விரும்பி வசிக்கும் அரசமரம் தான் புத்தருக்கு ஞானம் அளித்த போதி மரம்.

---



தமிழ்த்தேனீ
rkc1947@gmail.com

---

26.

## பூரண சுதந்திரம் யாருக்கு?

-- சி. ஜெயபாரதன், கனடா.



பாரதம் பெற்றது பாருக்குள்ளே
ஓரளவு சுதந்திரம் !
பூரண விடுதலை வேண்டிப்
போராடி னோம் !
பூமி இரண்டாய்ப் பிளந்தது !
பூகம்பம் நிற்காமல்
மும்மூர்த்தி  யானது
பங்களா தேசமாய் !
கட்டுப்பா டுள்ள சுதந்திரம்
கண்ணிய மானிடருக்கு !
கட்டவிழ்த் தோடும் சுதந்திரம்,
காட்டு மிராண்டி களுக்கு !
ராவணன் சீதையைத் தூக்கி
ரதத்தில் போவான் !
பூரண சுதந்திரம் அசுரப்
போர்க்களம் !

பஞ்ச பாண்டவர்
பகடை ஆடுவர் சூதில்
பத்தினியைப் பணயம் வைத்து !
பட்டப் பகலில் பாஞ்சாலி
பட்டுச் சேலையைப்
பலர் முன்
பற்றி இழுப்பான்
துச்சாதனன் !
கண்ணன் குளிக்கும் மாதர்
புடவை
களவாடு வான் !
பூரண  சுதந்திரம் மாந்தர் புகும்
குருச்சேத்திரம் !

மசூதியை இரவில் தகர்த்து
வேரறுப்பது
பூரண சுதந்திரம் !
பாதிரியார் உடையில்
தீ வைப்பது
வேதியர் சுதந்திரம் !
ரயில் பெட்டிகளை எரித்துச்
சவப் பெட்டி ஆக்குவது
நவகாளிச் சுதந்திரம் !
பூரண சுதந்தி ரத்தில்
மதம் பிடித்த யானைகள்
மனித நேயத்தை மிதிக்கும்.
சுதந்திர நாட்டில்
மதக் கோலத் திருவிழா
கும்ப மேளா !

எழுத்துச் சுதந்திரத்தில்
ஒழுக்கம், கடமை, கண்ணியம் !
விதிகளுக்கு அடங்கிய
நிதிச் சுதந்திரம் !
உரிமைத் தேர்ச்சி யில்லாத
வறுமைச் சுதந்திரம் !
கட்டவிழ்த் தோடும் முழுச் சுதந்திரம் !

பட்டு உதிரும் சுதந்திரம் !
ஒட்டு மாங்கனியாய்
நட்டு வைக்கும் சுதந்திரம் !
சுட்ட பழமா அல்லது
சுடாத பழமா
எது சுதந்திரம் ?

எட்டித் தொட முடியா
பனிச் சிகரத்தில்
வேராய் மறைந் திருக்கும்
பூரண சுதந்திரம்
சீரழிவுப் பாதை !
முழு விடுதலை பெற்றவர்
மோகன் தாஸ் காந்தி !
போதி மரத்தடியில்
பூரண விடுதலை வேண்டித்
தவம் புரிகிறார்
போலிச் சாமியார்
புதிய பூமிக்கு !
பூரண சுதந்திரம் வேண்டுமா ?
ஓரளவு போதும் !

---



சி. ஜெயபாரதன்
jayabarathans@gmail.com

---

## 27.

# இஞ்சி செடி நட்டு வளர்ப்பது எப்படி?

-- முனைவர் வீ. எஸ். ராஜம்.

**சுபா:**

முன்னர் உங்களிடம் மஞ்சள் பற்றி கேட்டிருந்தேன். இஞ்சியை எப்படி நட்டீர்கள். செடி பிரத்தியேகமாக வாங்க வேண்டுமா அல்லது கடையில் நாம் வாங்கும் இஞ்சியை அப்படியே மண்ணுக்குள் வைத்து நீரூற்றினால் செடி வளருமா? சொன்னால் அடுத்தகோடை விவசாயத்திற்கு இப்போதே யோசிக்கத் தொடங்கி விடுவேன். :-)

**வீ. எஸ். ராஜம்:**

அப்ப்ப்பா! சுபாவாவது என் தொட்டித்தோட்டத்து விவசாயத்தில் அக்கறை காட்டுகிறார்களே! மகிழ்ச்சி!

**சுபா:**

செடி பிரத்தியேகமாக வாங்க வேண்டுமா அல்லது கடையில் நாம் வாங்கும் இஞ்சியை அப்படியே மண்ணுக்குள் வைத்து நீரூற்றினால் செடி வளருமா?

**வீ. எஸ். ராஜம்:**

செடி பிரத்தியேகமாகக் கிடைக்காது, சுபா. நாம்தான் இஞ்சியை மண்ணுக்குள் வைத்து வளர்க்கணும்.

**சுபா:**

சொன்னால் அடுத்தகோடை விவசாயத்திற்கு இப்போதே யோசிக்கத் தொடங்கி விடுவேன்.

**வீ. எஸ். ராஜம்:**

காத்திருக்கவேண்டாம்! இப்போதே தொடங்கிவிடவும்.

---

இங்கே மண்ணுக்குக் கீழே விளையும் எதையும் செடிகளாக விற்பதில்லை, சுபா. முளைவிட்ட கிழங்குகளாகச் சில இடங்களில் விற்கிறார்கள். வசந்த வெங்காயம் (spring onion) என்ற பெயரில் வெங்காயம் இளந்தண்டோடு கிடைக்கும். அவ்வளவே.

வெங்காயம், இஞ்சி, மஞ்சள், பூண்டு ... இதெல்லாவற்றையும் வளர்க்க எனக்குக் கைகொடுத்த முறை இங்கே:





1. தொடக்கத்தில் நிறைய சோம்பேறித்தனம் வேண்டும்!! கொஞ்சம் முண்டும் முடிச்சுமாக (with bumps/sprouts) உள்ள கிழங்குகளை எடுத்துக்கொள்ளவும். அந்தக் கிழங்குகளை ரொம்பக் கொஞ்சமாக நீர்ப்பசையுள்ள (moisture) ஒரு சின்னப் பையில் (paper/plastic) போட்டு, வண்டி நிறுத்தும் இடத்தில் (garage) அல்லது குளிர்பதனப்பெட்டியில் ஒரு மூலையில் போட்டுவிட்டு மறந்துவிடவும். வாரத்துக்கு ஒருமுறை அது என்ன ஆச்சு என்று பார்த்தால் போதும். நீர்ப்பசை தேவை.

2. கிழங்கு கொஞ்சம் கொஞ்சமாக முளைத்து வரும்.

3. இதற்கு இடையில், ஒரு நல்ல பயிரிடத்தைத் தேர்ந்தெடுக்கொள்ளவும். எங்கள் வளாகத்தில் நிலமகள் களிமண் + பாறை. ஆகவே, எனக்குத் தொட்டிகள். பொல பொல என்ற நல்ல மண் தேவை. அதாவது மண்ணில் நீர்ப்பசை தேங்கக்கூடாது.

4. முளைகட்டிவந்த கிழங்கை (இஞ்சி, மஞ்சள்) அந்தத்தொட்டிகளில் நட்டுவைக்கவும்.

5. வெயிலின் போக்குக்கேற்பத் தொட்டிகளை இடம் மாற்றி ... ஒருநாளில் கொஞ்சமாவது நேரடியாகக் கதிரவனின் பார்வை கிடைக்கும்படிப் பார்த்துக்கொள்ளவும்.

6. மிக மிக முக்கியமானது: முளைத்துவரும் இளந்தளிர்களைக் கொறிக்கும் பிறவிகளிடமிருந்து காக்கும் முறைகளை மேற்கொள்ளவும். தொட்டிகளைச் சுற்றி வலை போடலாம்.

போன ஆண்டில் ... இஞ்சி, மஞ்சள், பசலைக்கீரை ... ஆகியவற்றைச் செவ்வனே தழைபருவத்துக்குக் கொண்டுவந்தேன். வீட்டுக்குள்ளேயே தழைத்த பசலைக்கீரையை மிகவும் பெருமிதத்தோடு வெளியே கொண்டாந்து வச்சேன். மறுநாள் காலையில் அந்தத் தளிர்களைக் காணோம் காணோம். ரொம்ப நொந்துபோய் ஓராண்டு எதையும் பயிரிட விருப்பமில்லாமல் தொய்ந்துபோனேன். என்ன வியப்பு -- இந்த வசந்தத்தில் அதே செடி தளிர்த்திருக்கிறது!!! சிறு தொட்டி. பெயர்த்து எடுத்து வேறு நல்லிடம் கொடுக்கவேண்டும். இப்போதைக்குப் பாதுகாப்புக்காக ... கோழிவலைத் துண்டுகளைப் (chicken wire) போட்டுவைத்திருக்கிறேன். மஞ்சள் செடியின் கதையும் இதுவே.

இன்னும் சில நாட்களில் ஒரு மஞ்சள் செடியையும் ஒரு வெங்காயச் செடியையும் அறுவடை செய்ய நினைக்கிறேன்.

என் வீட்டுக் கறிவேப்பிலைச் செடிகளும் பாவம். தொட்டியில்தான் அவுங்களுக்கு வாழ்வு. இன்றைக்குத் திருக்குறள் 550 பார்முலா கடைப்பிடித்து ... தொட்டி முழுக்கக் கிளைத்திருந்த களைகளைக் "கட்டேன்." வள்ளுவர் என்னை மன்னிப்பாராக!

ஒவ்வொரு வீட்டிலும் பயிரிடுங்கள். அழகுக்காகப் பயிரிடப்படும் பயிர்களிலும் சத்து உண்டு, அதைத் தெரிந்துகொள்ளவும்.

---



முனைவர் வீ. எஸ். ராஜம்

---

## 28.

# கல் மரங்கள்: திருவக்கரை பகுதி

-- சிங்கநெஞ்சம் சம்பந்தம்.

தீக்குழம்பாய் சுழன்று கொண்டிருந்த புவிப்பந்து, குளிரத் தொடங்கியது. கெட்டிப் பட்டது. பாறைகள் தோன்றின. இவைகளே தீப் பாறைகள் அல்லது அழற் பாறைகள்- ஆங்கிலத்தில் IGNEOUS ROCKS.

தொடர்ந்து நிகழ்ந்து வரும் தட்ப வெப்ப மாற்றங்களால், பூமியின் மேற்பரபில்லுள்ள பாறைகள் சிதைவுறுகின்றன. இப்படித்தான் மண் உருவாகிறது. இந்த சிதைவுகள் காற்று, மழை மற்றும் ஆறுகளால் அடித்துக் கொண்டுவரப்பட்டு பெரிய ஏரி - கடல் போன்ற நீர் நிலைகளில் படிகின்றன. இந்த நிகழ்வு லட்சக்கணக்கான- கோடிக்கணக்கான ஆண்டுகள் தொடர்ந்து நடைபெறும்போது பல நூறு மீட்டர்கள் கனத்திற்கு படிவங்கள் படிந்துவிடுகின்றன. இதனால் அடிப்பகுதியில் உள்ள படிவங்களில் அழுத்தமும் வெப்பமும் அதிகரிக்கின்றன. இதன் விளைவாகவும் இன்ன பிற புவியியல் மாற்றங்களாலும் படிவங்கள் பாறைகளாக கெட்டிப்பட்டு "படிவப் பாறைகள்" ( SEDIMENTARY ROCKS) உருவாகின்றன.

படிவப் பாறைகள் உருவாகும் போது அந்த நீர்நிலைகளில் இருந்த நீர்வாழ் உயிரினங்களும் (சிப்பிகள்-மீன்கள்-நண்டுகள்-நீர்வாழ் தாவரங்கள் போன்றவை), ஆற்றில் அடித்து வரப்பட்ட உயிரினங்கள் மற்றும் மரம் செடி கொடிகளின் மிச்சங்களும் படிவங்களோடு சேர்ந்து படிந்து மடிந்து கல்லாய் சமைந்து விடுகின்றன. இப்படிக் கல்லாய் சமைந்த பழங்காலத்து உயிரினங்களின் மிச்சங்களும்-எச்சங்களுமே ஆங்கிலத்தில் 'பாசில்ஸ்'(fossils) என்று அழைக்கப்படுகின்றன–தமிழில் "தொல்லுயிரெச்சங்கள்". இவை பற்றிய கல்வி- 'தொல்லுயிரியல்'- 'Palaeontology.'

பொதுவாக தொல்லுயிரெச்சங்கள் படிவப் பாறைகளிலேயே காணப்படுகின்றன. தமிழகத்தின் கிழக்குப் பகுதிகளில் படிவப் பாறைகள் உள்ளன. தொல்மர எச்சங்கள் திருவக்கரை, நெய்வேலி, அரியலூர் பகுதிகளிலும், தொல்இலை எச்சங்கள் திருப்பெரும்புதூர், அரியலூர், சிவகங்கை பகுதிகளிலும், கடல்வாழ் மெல்லுயிரிகளின் எச்சங்கள் அரியலூர் பகுதிகளிலும், டைனோசார் எச்சங்கள் அரியலூர் பகுதியிலும் கிடைக்கின்றன.

முதலில் கல்மரங்கள் பற்றிக் காணலாம். இங்கு கல்மரம் (FOSSIL WOOD) எனக் குறிப்பிடப் படுவது இன்று கல்லாகிப் போன பண்டைய காலத்து மரங்களையே

ஆகும். இந்தியாவில் கல் மரங்கள் அதிகமாகக் காணப்படுவது நம் தமிழகத்தில்தான். விழுப்புரம் மாவட்டத்தில் , புதுச்சேரி மாநில எல்லையில் உள்ள திருவக்கரை எனும் கிராமத்திலிருந்து (நிறைநிலாக் காலங்களில் பக்தர்கள் கூடும் வக்கிரக் காளியம்மன் கோயில், திருவக்கரையில் உள்ளது.) ஒரு கி.மீ. தொலைவில்,மிகவும் அரிய, முழுவதும் கல்லாக மாறிப்போன மரங்கள் ஏராளமாக இருக்கின்றன.இந்திய புவியியல் ஆய்வுத் துறை (GEOLOGICAL SURVEY OF INDIA) இந்தப் பகுதியில் கல்மரப் பூங்கா ஒன்றினை அமைத்துக் காத்து வருகிறது.

சென்னையிலிருந்து திருச்சி செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் (தே.நெ.45), திண்டிவனத்திற்கு தெற்கே பத்து கி.மீ. தொலைவில், கூட்டேரிப்பட்டு எனும் ஊர் உள்ளது. அங்கிருந்து மைலம் வழியே புதுச்சேரி செல்லும் சாலையின் தெற்கே உள்ளது-திருவக்கரை.சென்னையிலிருந்து 150 கி.மீ.; புதுச்சேரியிலிருந்து 30 கி.மீ.

சரி, இந்தக் கல்மரம் சொல்லும் கதை என்ன?
“இந்தப் பகுதி இரண்டு கோடி ஆண்டுகளுக்கு முன் பெரும் நீர்நிலையாய் இருந்தது. அதையொட்டி இருந்த நிலப் பகுதிகளில் பெருங்காடுகள் இருந்தன. அக்காடுகளில் கனிதரும் வகையை சேர்ந்த மரங்களும் கனிதரா வகை மரங்களும் இருந்தன. இப்பெருமரங்களை அடித்துக் கொண்டுவரும் அளவிற்கு வெள்ளப்பெருக்கு அக்காலத்தில் நிகழ்ந்திருக்கிறது.”

ஆனால், திருமாலின் சீற்றத்திற்கு ஆளான அசுரர்கள் அந்த நெடியோனால் அழிக்கப்பட்டனர் . அந்த அசுரர்களின் எலும்புகளே இந்த நெடிய கற்கள் என்பது உள்ளூரில் வழங்கும் புராணக் கதை.

**தமிழகத்தில் படிவப்பாறைகள் உள்ள பகுதிகள்**




தேசிய கல்மரப்பூங்கா
GOVERNMENT OF INDIA
GEOLOGICAL SURVEY OF INDIA
NATIONAL FOSSIL WOOD PARK
TIRUVAKKARAI
GSI GSI


இந்திய புவியியல் ஆய்வுத் துறை
தேசிய கல்மரப் பூங்கா
- தலைமை இயக்குநர்.



இவை கடலூர் மணல் பாறைகள் என அழைக்கப்படும் படிவப் பாறைகள்
-இரண்டு கோடி ஆண்டுகளுக்கு முன் தோன்றியவை;
இந்தப் பாறைகளில்தான் கல்மரங்கள் புதைந்து கிடக்கின்றன

## 29.

## WHILE RULERS CHANGED, TRADE THRIVED

-- K R A Narasiah

With A System Of Merchant Guilds, Levies, Tamil Traders Did Roaring Business With Rome, Far East.

Numismatic evidence shows that Roman-Tamil trade in ancient times thrived for centu ries without break, though now and then there was slackness. An important point is that intermodal transportation was well known then. Cargo came to the Indian west coast, moved to east coast by land and river, and left through the eastern ports. After emperor Nero's passing away in Rome there was a lull in sea trade, which recovered later though the currency changed from gold to silver and copper coins.History has it that Karur was at various times under Chera, Chola or Pandyas. But trade in the river port flourished irrespective of who ruled.Epigraphical, literary and numismatic evidence show that Karur was an emporium of trade. Ptolemy mentions it as early as 2nd century.

Apart from a strong merchant fleet and a sailing community, ancient Tamils had supporting organizations called by various names -largely independent of whoever was ruling at that point of time -but controlling the trade in an efficient manner.

The ruler of the day did not interfere with the trading communities.Merchant guilds known by various names such as “Anjuvannam“, “AinnuRRuvar“, “Manigramam“ and “Padinenvishayam“ had well established trade practices. They had their own methods of collecting levies for cargo imported and exported along with fees for port security and efficient cargo handling.

These traders created an atmosphere of goodwill among the local population by constructing water tanks and places of worship -a corporate social responsibility initiative of those days. This ensured that trade was smooth in spite of changing regimes. The rulers, however, did ensure safe transit of ships and provided various supporting facilities, in addition to collecting custom duties for imported articles.The classic case is that of Rajendra Chola who with one of the best known navies of the world ensured that traders were well protected and ensured easy passage for them.

According to well-known historians Noboru Karashima and Y Subbarayulu, Padinenvishayam was an organization of high order, which controlled other guilds such as Manigramam, Senamugam etc. These names have been found in various countries with whom the merchants of the Chola period carried on trade.

Padinenvishayam means eighteen countries. In a gloss on grammar treatise "Nannul", Mayilainathar names the eighteen countries. Guilds must have operated as an organized network between various countries for good logistics support.

The craftsmen who went out in the ships to countries in the far east continued their profession there supported by the merchant guilds. A 3rd or 4th century inscription that says "Perumpatan Kal" in Brahmi script, meaning "the touchstone of the chief goldsmith", has been preserved in a Thailand museum. A tank was constructed and put under the protection of a merchant guild -Manigramam.

Karashima has observed two more Tamil inscriptions now kept in a Bud dhist temple and says one of them mentions the name of a donor "Dhanmasenapathi" who made a grant to brahmins. In Pagan (Myanmar), a 13th century inscription shows a Vaishnavite mantra and also says that a hall was built by "Irayiran Kulasekhara Nambi".

But the most amazing inscription is the one recorded by T N Subramaniam. This was from Quanzhou, a medieval port of south China. The text reveals that one Champanda Perumal, also known as Thava-Chakravarthigal, having got a grant of land from the then King Khan, built a temple there and called it ThiruKhaneeswaram after the Khan.

An inscription found in the Vishnu temple of Ponneri states that to make Mylapore a protected harbor levy was laid on goods imported and exported. A voluntary levy of the trade guilds was denoted by the term “Pattinapakudi“. Pakudi is a share for the betterment of the “pattinam“ (a port) given by the trade guilds.
(The author is a former marine chief engineer, Tamil writer and heritage enthusiast)



## OF FINE WINE & JEWELLERY

**Tamil country was a key player in the globalized trade that took place 2,000 years ago**

- **Roman coins found** from 1st century BC to 5th century AD in TN are proof of trade
- Coins from eras of **emperors Augustus, Tiberius** found
- **Chinese coins** also found
- **Great demand in Rome for pearls,** spices and other exotic items from Tamil country
- In 22 BC, **Tiberius told Roman senate that demand for Indian jewellery is draining Rome**
- Every year, **Tamils drained Roman gold worth 1 million pounds**
- **Glass beads, gemstones from Arikamedu** found in Thailand
- **Tamil kings traded away their wealth for fine wine** from Rome
- **Roman wine jars found inland in Tamil country** too; shows extensive wine import and ports network
- **Mullaippaattu of Sangam literature talks about yavana (westerners) warriors;** Silappadhikaram says sentries at gates were yavanas



**ROYAL FAVOUR:** An inscription from Quanzhou, a medieval port in China, says Champanda Perumal got a grant from a King Khan, built a temple and called it "ThiruKhaneeswaram"

Source: Times of India

http://epaperbeta.timesofindia.com//Article.aspx?eid=31807&articlexml=WHILE-RULERS-CHANGED-TRADE-THRIVED-07102015006006&Mode=1

---



Mr. K R A Narasiah
narasiah267@gmail.com

---

# தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடுகள்

**மின்நூல்கள்:**

THF Announcement: E-books update:05/10/2015 - ரூசோ
THF Announcement: E-books update:26/09/2015 - வயித்தியாநுகூலஜீவரட்சணி முதற்பாகம்
THF Announcement: E-books update:20/09/2015 - ஒரு பைசாத்தமிழன் - பாகம் 2
THF Announcement: E-books update:13/09/2015 - ஒரு பைசாத்தமிழன்
THF Announcement: E-books update:07/09/2015 - திருவிடைமருதூர்க் காருணியாமிருத தீர்த்த மகிமை
THF Announcement: E-books update:28/08/2015 - வினோதவிடிகதை
THF Announcement: E-books update:16/08/2015 - ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தான வரலாறு
THF Announcement: E-books update:08/08/2015 - தாலாட்டுப் பிரபந்தம்
THF Announcement: E-books update:31/07/2015 - கோபால கிருஷ்ண பாரதியார்

**காணொளிகள்:**

மண்ணின் குரல்: அக்டோபர் 2015: பேரா.டாக்டர்.யாரோச்லாவ் வாட்சேக் பேட்டி
மண்ணின் குரல்: அக்டோபர் 2015: மேல்சித்தாமூர் பார்சுவநாதர் ஜினாலயம்
மண்ணின் குரல்: அக்டோபர் 2015: திரு.மாவை சேனாதிராஜாவுடனான பேட்டி
மண்ணின் குரல்: செப்ட் 2015: திருமலை குந்தவை ஜினாலய பாறை சிற்பங்களும் ஓவியங்களும்
மண்ணின் குரல்: ஆகஸ்ட் 2015: திருவாதவூர் திருமறை நாதர் கோயில்-பாண்டியர் கால கோயில் அமைப்பு
மண்ணின் குரல்: ஆகஸ்ட் 2015: புற்று மாரியம்மன் ஆலயம், டர்பன் தென்னாப்பிரிக்கா
மண்ணின் குரல்: ஜூலை 2015: திருமலை ஸ்ரீ பார்சுவநாதர் சிற்பமும் பாறை திருவடிகளும்
மண்ணின் குரல்: ஜூலை 2015: திருமலை ராஜராஜன் சிற்பம்

**நாடாற்குலமித்திரன்:**

நாடார்குல மித்திரன் - 1923 - பிப்ரவரி மாதத்தின் 3 வது இதழ்
**நாடார்குல மித்திரன் - 1923 - பிப்ரவரி மாதத்தின் 2 வது இதழ்**




Tamil Heritage Foundation
தமிழ் மரபு அறக்கட்டளை

Electronic preservation of Tamil heritage materials
e-Book series
an international NGO initiative to digitize old Tamil books and palm leaf manuscripts
visit http://www.tamilheritage.org

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு.

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி.

மேலும் அறிய: http://www.tamilheritage.org




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை